# காதலும் கடமையும்

பெ. தூரன்

விற்பனை உரிமை :

பாரி நிலையம்

59, பிராட்வே, சென்னை-1.

முதற் பதிப்பு: பிப்ரவரி, 1957
இரண்டாம் பதிப்பு: ஜனவரி, 1963
மூன்றும் பதிப்பு: ஜனவரி, 1967



விலை ரூ. 1-75

சுதந்திர நிலைய வெளியீடு—17



மாருதி பிரஸ், 83, பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14.

## நாடகத்தில் தோன்றுவோர்

டாக்டர் கேசவன்

ராமன்

ராஜு

சரோஜா

மீனாட்சி

நாகவல்லி

இந்த நாடக நிகழ்ச்சிகள் திருச்சிராப்பள்ளியிலு சென்னையிலும் நடைபெறுகின்றன.

# காதலும் கடமையும்

## முதல் அங்கம்

### காட்சி ஒன்று

[திருச்சிராப்பள்ளியிலே நகரின் வெளிப்புறமான ஒரு பகுதி. அங்கே ஒரு மாளிகையின் முன்பு டாக்டர் கேசவன் தோற்றமளிக்கிறான். அவனுக்குச் சுமார் முப்பது வயதிருக்கும். சேவையில் ஆர்வமுடையவன் என்பதை அவனைப் பார்த்ததும் எளிதில் கண்டு கொள்ளலாம். இப்பொழுது அவனிடத்திலே ஒரு பரபரப்புக் காணப்படுகிறது. எங்கோ அவசரமாகப் புறப்பட்டுக்கொண்டிருக்கிறான். வேலைக்காரன் ராமன் டாக்டருடைய உத்திரவை எதிர் பார்த்து நின்றுகொண்டிருக்கிறான். மாலை நேரம்; மணி ஐந்தரை இருக்கும்.]

கேசவன்: ராமா, எல்லாம் பார்த்துக்கொள் நான் வெளியே போய்விட்டு வருகிறேன்.

ராமன்: சரிங்க...ஸார்...யாராவது வந்தால்...என்ன சொல்லட்டுங்க?

கேசவன் : ஏதோ அவசரமாக வெளியில் போயிருப்பதாகச் சொல். முக்கால் மணி, ஒரு மணிக்குள்ளே திரும்பி வந்து விடுவேன்.

[கேசவன் போய்க்கொண்டே பேசுகிருன். அந்தச் சமயத்தில் ராஜு அவசரமாக எதிரே வருகிருன். அவனுக்கு ஏறக்குறைய டாக்டர் வயதுதானிருக்கும். அவன் முகத்திலே ஒரு விதக் கலவரம் தோன்றுகிறது.]

ராஜு : நமஸ்காரமுங்க......டாக்டர். வெளியே புறப்பட்டு விட்டீங்களா?

கேசவன் : ஆமாம்......என்ன விஷயம்? நீங்கள் யார்?

ராஜு: என் பேரு ராஜுங்க...ஒரு அவசரத்திலே வந்திருக்கிறேனுங்க...

கேசவன் : என்ன அவசரம்?

ராஜு (கொஞ்சம் தடுமாற்றத்தோடு) : அவசரம் ஒண்ணும் இல்லீங்க...என் மனைவிக்கு ஏதோ திடீர்னு... நிலைமை கொஞ்சம் மோசமாகத்தான் இருக்குதுங்க...

கேசவன் : உங்கள் மனைவிக்கா? உடம்புக்கு என்ன?

ராஜு : நல்லாத்தான் இருந்தாளுங்க......ஆனா, என்னமோ...வயிற்றை வலிக்குதுன்னு படுத்தாள்... நேற்றுக்கூட அப்படிச் சொன்னுள். அப்புறம் சரியாய் விட்டது...

கேசவன் : வயிற்றுவலி இப்படி அடிக்கடி வருகிறதுண்டோ?

ராஜு : இல்லீங்க...அவளுக்கு இப்பக்கூட வயிற்று வலி கிடையாதுங்க...என்னமோ நெஞ்சு வலிக்குதுன்னு நேற்றிலிருந்து சொன்னுளுங்க.

கேசவன் (போய்க் கொண்டே) : ஏய்யா, விஷ யத்தை மாற்றி மாற்றிச் சொல்லுகிறீரே? நேற்றி லிருந்தா உடம்புக்குச் சரியில்லை?

ராஜு : இல்லீங்க... ஆமாங்க...மேலெல்லாம் ஒரே குடைச்சலாக இருக்குதுன்னு சொன்னளுங்க.

கேசவன் (சற்று நின்று) : நீங்கள் சொல்லுவதே எனக்குச் சரியாகப் புரியவில்லை. என்னமோ மாற்றி மாற்றிப் பேசுகிறீர்கள்?

ராஜு : நான் ஒண்ணும் மாற்றலீங்க...உள்ளதைத் தான் சொன்னேனுங்க.

கேசவன் : இப்போ நான் ஒரு அவசர காரியமாகப் போகிறேன். போய் வந்ததும் இன்னும் அரைமணியிலே உங்கள் வீட்டுக்கு வந்து பார்க்கிறேன். வீடு எங்கே இருக்கிறது?

ராஜு : அடுத்த தெருவிலேதானுங்க—ரங்கசாமி நாயுடு தெரு, நாலாம் நம்பர் வீடு...என்பேரு, ராஜுங்க ......இப்பவே வந்தா நல்லதுங்க......நிலைமைரொம்ப மோசமா இருக்குதுங்க. நாலாம் நம்பர் வீடுங்க, ரங்கசாமி நாயுடு தெரு.

கேசவன் : ராஜு, நீங்கள் வீட்டுக்குப் போங்கள். நான் அரைமணியிலே கண்டிப்பாக வந்து பார்க்கிறேன்... உங்கள் வீட்டு விலாசத்தையும் இதோ குறித்துக் கொண் டேன்.

[சிறிய நோட்டுப் புத்தகத்திலே எழுதுகிருன்.]

ராஜு : இப்பவே வரப்படாதுங்களா டாக்டர்? நிலைமை கேவலமாகத்தான் இருக்குது. ஒருவேளை நீங்கள் வர்ரத்துக்குள்ளே...ஆனல் அரைமணியிலே வந்தாலும் போதும், எதுக்கும்...

[இதற்குள்ளே கேசவன் வெளியே சென்று விடுகிறன். அவன் போன திசையைப் பார்த்துக்கொண்டே ராஜா மெதுவாகக் காலெடுத்து வைக்கிறன். பலவிதமான உணர்ச்சிப் போராட்டம் அவன் முகத்திலே தோன்றுகிறது. கேசவனுடைய கார் புறப்படும் சப்தம் கேட்கிறது.]

டாக்டர், இப்பவே வந்து பாருங்க டாக்டர்...இல்லே இல்லே...அப்புறம் வந்தாலும் போதும்.

[போய்க்கொண்டே பேசுகிறன்.]

திரை

## காட்சி இரண்டு

[ஒரு பூங்காவிலே தனிமையான இடம்: சரோஜா யாரையோ எதிர்பார்த்துக்கொண்டு நிற்கிறள். அவளுக்கு வயது சுமார் இருபத்துநான்கிருக்கும். அழகிய தோற்றமுடையவள். அவளுடைய முகம் அமைதியான தன்மையையும், மனவுறுதியையும், நல்ல கல்வியையும் புலப்படுத்துகின்றது. மாலை நேரம்; மணி ஐந்தே முக்கால். தூரத்தில் கார் வேகமாக வந்து நிற்கும் சப்தம் கேட்கிறது. கேசவன் அவசரமாக வருகிறன்.]

கேசவன் : சரோஜா, ரொம்பநேரமாகக் காத்திருக்கிருயா? புறப்படுகிற சமயத்திலே கொஞ்சம் தாமதமாகி விட்டது.

சரோஜா : நீங்கள் எனக்கு முன்னுல் வந்து காத்திருப்பீர்களோ என்று நான் அவசரம் அவசரமாக வந்தேன்.

கேசவன் : நான்தான் உன்னைக் காக்க வைத்து விட்டேன், மன்னிக்க வேண்டும் சரோஜா.

சரோஜா : டாக்டர், உங்களுக்காக நான் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் காத்திருப்பேன். அது எனக்குச் சந்தோஷமே கொடுக்கும்

கேசவன் : இனிமேல் நீ காத்திருக்க வேண்டிய தில்லை. நான் முடிவு செய்துவிட்டேன் சரோஜா...

சரோஜா (ஆவலோடு) : நிஜமாகவா டாக்டர்? என்னுடைய ஆறு வருஷக் கனவு பலிக்கும் நேரம் வந்து விட்டதா?

கேசவன் : உன்னுடைய கனவு மட்டுந்தானா? என்னுடைய கனவும் பலிக்கப் போகிறது. இனி, நாம் கலியாணம் செய்து கொள்ளலாம். எனக்கு இனிமேல் தடை எதுவும் இல்லை. இதைச் சொல்லுவதற்காகத்தான் உன்னை இங்கே சந்திக்கும்படி கடிதம் அனுப்பினேன்.

சரோஜா (தழுதழுத்த குரலில்) : டாக்டர், இந்த வார்த்தைகளுக்காக நான் எத்தனையோ நாட்களாக ஏங்கிக் கிடந்தேன்—இன்றுதான் என் உள்ளம் குளிர்ந்தது...

கேசவன் : சரோஜா, இனிமேல் நீ என்னுடைய சரோஜா...நான் உன்னுடைய கேசவன்...

[மெதுவாக அவள் கையைப் பிடிக்கிறான். காதல் ததும்ப சரோஜா பக்கத்தில் வருகிறாள். காதலோடு கேசவனைப் பார்க்கிறாள்.]

சரோஜா (மேலும் தழுதழுத்த குரலில்) : கேசவ்... என் டாக்டர் கேசவ், நான், நான், உங்களுக்கு என்றுமே அடிமை. உங்களுக்கு அடிமை செய்யும் பாக்கியம் எனக்கு என் வாழ்நாள் முழுவதும் கிடைத்தால் அதுவே போதும்.

[கேசவன் அவளைப் பக்கத்தில் இழுத்துக் கொள்ளுகிறான்.]

கேசவன் : சரோஜா, நாம் இரண்டு பேரிலும் யார், யாருக்கு அடிமையாக இருக்கப்போகிறோம் என்பதை இனிமேல்தான் பார்க்கப்போகிறோம். இந்தப் போட்டியிலே நீ ஜெயிக்க முடியாது என்று நிச்சயமாய்ச் சொல்லுவேன்.

சரோஜா (மகிழ்ச்சியோடு) : கேசவ், இதிலே ஆண்கள் என்றைக்காவது வெற்றி பெற்றிருக்கிறார்களா?

கேசவன் : இப்படிச் சந்தேகமே வராமலிருக்கும்படியாக நான் செய்யப் போகிறேன்.

சரோஜா : நிஜமாகவா, கேசவ்?

கேசவன் : ஆமாம்...வாழ்க்கையிலே எனக்கு அதுதான் சிறந்த இன்பத்தை அளிக்கப்போகிறது. அது எனது இன்பம் மட்டுமல்ல. அது என்னுடைய முதல் கடமை.

சரோஜா : அது உங்களுடைய இன்பமென்றால் நான் பாக்கியசாலிதான். ஆனால், அது உங்களுடைய முதல் கடமை என்று நீங்கள் இப்பொழுது கூறுவதை நான் ஒப்புக் கொள்ளவே மாட்டேன். உங்களுடைய முதல் கடமை எதுவென்று எனக்கு நன்றாகத் தெரியும். அதற்காகத்தான் என்னை இத்தனை நாள் சந்தேகத்திலே ஏங்கித் தவிக்கவிட்டீர்கள்?

கேசவன் : ஆமாம் சரோஜா, அதை நான் மறந்துவிடவில்லை. நமது நகர முழுவதுக்கும் சேவை செய்ய இயலாவிட்டாலும் சுற்றுப்புறத்திலுள்ள ஒரு பகுதிக்காவது நான் சேவை செய்ய வேண்டும் என்பதை எனது முதற்கடமையாக நினைக்கிறேன். மக்களுடைய ஆரோக்கியத்தைக் கவனிப்பதுதான் என்னுடைய முதல் கடமை.

சரோஜா : நீங்கள் கட்டிவைத்திருக்கும் பிரசவ விடுதி அதற்கு ஒரு பெரிய அத்தாட்சியாக விளங்கு கிறதே? அதற்கு எப்பொழுது திறப்பு விழா நடத்தப் போகிறீர்கள்?

கேசவன் : சரோஜா, அதைக் கட்டி முடித்து விட்டுத்தான் உன்னைக் கலியாணம் செய்து கொள்ளுவ தென்று நான் தீர்மானித்திருந்தேன்.

சரோஜா : சரி சரி...நல்ல யோசனை செய்தீர்கள்.

[வாய்விட்டுச் சிரிக்கிறாள்.]

கேசவன் : ஏன் சிரிக்கிறாய் சரோஜா?

சரோஜா : இப்படி வெளியிலே சொல்லாதீர்கள். எல்லோரும் சிரிப்பார்கள்.

கேசவன் : ஓகோ......அப்படியா? (சிரிக்கிறான்) அதிருக்கட்டும் சரோஜா, மக்களுடைய சேவைக்காகவே நம்முடைய வாழ்க்கை அமையவேணும். அதுதான் என்னுடைய ஆசை. என்னென்ன வகையிலே மக்க ளுடைய சுகத்திற்காக உதவலாம் என்று நாம் யோசனை செய்து திட்டம் வகுக்கவேணும்.

சரோஜா : இப்பொழுதே திட்டம் வகுப்பதென் றால் எனக்குப் பயமாக இருக்கிறது.

கேசவன் : ஏன்...?

சரோஜா : பிரசவ விடுதித் திட்டம் போட்டதா லேயே கல்யாணம் செய்துகொள்ளுவதா வேண்டாமா என்று தீர்மானம் செய்ய இரண்டு வருஷம் தள்ளிப் போட்டீர்கள்.

கேசவன் : இனிப் போடுகிற திட்டமெல்லாம் நீ கூட இருந்து நடத்துகிற திட்டமாகத்தான் இருக்கும். ஆகையால் அதைப்பற்றிக் கவலைப்படவேண்டாம்.

சரோஜா : முந்திய திட்டத்தையும் நான்கூட இருந்திருந்தால் தடுத்தா விடுவேன்?

கேசவன் : அப்படியில்லை சரோஜா. ஏழைகளுக்கு இலவசமாக வைத்தியம் செய்யவேனும்—பணக்காரர்களிடமிருந்து கிடைக்கிற பணத்தைக்கொண்டு இரண்டு ஆண்டுகளிலே பிரசவ விடுதி கட்டிவிட வேண்டும் என்று உறுதிசெய்துகொண்டிருந்தேன். அதை நிறைவேற்றுமல் என்னைப்பற்றியும் எனது சுகத்தைப்பற்றியும் நான் நினைக்க விரும்பவில்லை.

சரோஜா (சிரித்துக் கொண்டே) : பொதுமக்களுடைய சேவை...அது முதலில். பிறகு இரண்டாவதாக உங்களுடைய சுகம். இந்த இரண்டு நினைப்புக்களைத்தவிர உங்களுக்கு வேறு நினைப்பே இல்லை... அப்படித்தானே?

கேசவன் : உன்னைப்பற்றி நினைக்காமல் இருப்பேனு? நீ உன் தாயாரின் விருப்பத்தையும் பொருட்படுத்தாமல் என்னையே மணப்பதற்கு உறுதிகொண்டிருப்பதை நான் ஒவ்வொரு கணமும் எண்ணிக்கொண்டுதானிருந்தேன்.

சரோஜா : இப்பொழுதுகூட வீட்டிற்குப் போய் விஷயத்தைச் சொன்னுல்...அம்மா என்ன சொல்லுவாளோ? அவளுக்கு ஒரே சந்தேகம்.

கேசவன் : இனிமேல் அந்தச் சந்தேகமே வேண்டாமென்று சொல்லு. சீக்கிரம் கலியாணத்தை முடித்துவிட்டால், அவர்கள் சந்தேகம் நீங்கிவிடும். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை நான் நாளையிலிருந்தே கவனிக்கிறேன்.

சரோஜா : ஆமாம், அப்படிச் செய்யத் தொடங்கினால் அம்மாள்மனம் பூரித்துப்போவாள். அநாவசியமான சந்தேகங்களையெல்லாம் கற்பனை செய்துகொண்டு என்னை இப்படித் தினமும் வேதனைக்குள்ளாக்க மாட்டாள்.

கேசவன் : சரோஜா, நீ உன் தாயாரிடம் எவ்வளவு அன்பு கொண்டிருக்கிறாய் என்பது எனக்குத் தெரியாத விஷயம் அல்ல. நீ எனக்காக அவர்கள் விருப்பத்தைக் கூட மீறி நடந்து வந்திருக்கிறாய். உன்னை மனைவியாகப் பெறுவதற்கு நான் மிகுந்த பாக்கியம் செய்திருக்க வேணும்.

சரோஜா (புன்னகையோடு) : கேசவ், உங்களிடத்திலே எனக்குள்ள காதலைப்பற்றிப் புகழ்ந்து பேசுகிறீர்கள்; ஆனால் அதென்ன அவ்வளவு பெரியதா? உங்களுடைய உள்ளத்தை நான் அறியாதவளா? அதிலே எனக்காகப் பொங்கிக்கொண்டிருக்கும் அன்பை நான் அறிந்திருக்கும்போது என்னுடைய அன்பைப்பற்றி நான் எப்படிப் பெருமைப்பட முடியும்?

கேசவன் (அவளைத் தழுவிக் கொண்டு) : சரோஜா உண்மையிலேயே நான்தான் மிகுந்த பாக்கியசாலி. உன்னைப்போல என்னுள்ளத்தை நன்றாக யார் அறிய முடியும்? என்னுள்ளத்தை நீ நன்றாக அறிவாய் என்று சொல்வதுகூட அவ்வளவு சரியில்லையென்று தோன்றுகிறது. அந்த அன்பைப்பற்றி எப்படிச் சொல்வதென்றே தெரியவில்லை.

சரோஜா : கேசவ், எதற்காக அதைப்பற்றி நாம் பேசவேணும்? உள்ளமும் உள்ளமும் தெரிந்துகொண்டால் அது போதாதா?

கேசவன் : ஆமாம், சரோஜா. நீ சொல்லுவதுதான் சரி. என்னாலே வார்த்தையாலே சொல்ல முடியாது.

இரண்டு உள்ளங்களும் ஒட்டிக்கொண்டிருக்கின்றன. நான் பேச ஆரம்பித்தால் என்னைப்பற்றிப் பேசுவதா, உன்னைப்பற்றிப் பேசுவதாஎன்றேதெரியவில்லை. அப்படிப் பிரிக்கவே முடியாத வகையில் ஒன்ருக இருக்கிரும்.

சரோஜா: கேசவ்...கேசவ்...இப்பொழுது பேச்சே வேண்டாம். ஆழ்ந்த காதலைப்பற்றி எடுத்துச்சொல்லு வதற்குப் பேச்சுக்குச் சக்தியே கிடையாது.

கேசவன்: நீ சொல்லுவதுதான்உண்மை, சரோஜா. காதல் என்கிற அற்புத உணர்ச்சியைக் கடவுள் கொடுத் திருக்கிருர். மனிதன் உண்டாக்கிய வார்த்தையாலே அதைப்பற்றிப் பூரணமாகச் சொல்ல முடியாது.

[இருவரும் ஒருவரை ஒருவர் ஆழ்ந்த காதலோடு பார்த்துக்கொண்டு நிற்கிருர்கள். பிறகு திடீ ரென்று ஏதோ நினைவுக்கு வந்தவன்போலக் கேசவன் பேசுகிருன்.]

சரோஜா ஒரு விஷயத்தை மறந்தேபோய்விட்டேன். யாரோ ஒருவர் தன் மனைவிக்கு உடம்பு சரியில்லை என்று நான் புறப்படுகிற சமயத்திலே வந்தார். அரைமணியில் வந்து பார்ப்பதாகக் கூறிவிட்டு வந்தேன்.

சரோஜா: சரி, கேசவ்......புறப்படுங்கள். நானும் என் வீட்டிற்குப் போய், அம்மாளிடம் பக்குவமாக விஷயத்தைத் தெரிவிக்கிறேன்.

கேசவன்: கலியாணம் நிச்சயமாகிவிட்டது என்றே சொல்லிவிடு. அதிலே அவர்களுக்கு இனிமேல் சந்தேகமே வேண்டாம். நானும் அம்மாளை நாளைக்குச் சந்தித்துப் பேசுகிறேன்...நான் போய்வரட்டுமா...சரோஜா, என் காரிலேயே வா. உன் வீட்டுக்கு முன்னுல் உன்னை இறக்கி விட்டுவிட்டு அப்படியே அந்த ராஜு வீட்டிற்குப் போகி றேன். இருட்டும் ஆகிவிட்டது...

சரோஜா (போய்க்கொண்டே பேசுகிறாள்) : யார் அந்த ராஜு?

**கேசவன் :** அவன் மனைவிக்குத்தான் உடம்பு சரியில்லையாம். அவனை எனக்கு முன்னால் தெரியாது.

[இருவரும் மறைகிறார்கள். கார் புறப்படும் சப்தம் கேட்கிறது.]

திரை

## காட்சி மூன்று

[ராஜு வீட்டின் பக்கத்தில் கார் வந்து நிற்கும் சப்தம் கேட்கிறது. கேசவன் மருத்துவப் பை ஒன்றை எடுத்துக்கொண்டு வேகமாக வருகிறான். வீட்டுக்கு வெளியிலேயே ராஜு அவனைச் சந்தித்துக் கோபமாகப் பேசுகிறான். இருள் சூழ்ந்திருக்கிறது. சுமார் ஆறரை மணி இருக்கும்.]

ராஜு : யாரு டாக்டரா? வந்துட்டீங்களா? உங்கள் அவசர சோலியெல்லாம் தீர்ந்ததா?

கேசவன் (அமைதியாக) : என் காரியம் முடிந்ததும் நேராக இங்குதான் வருகிறேன். உள்ளே போகலாமா?

ராஜு : டாக்டர், இப்போ இங்கே எதற்காக வந்தீர்கள்? நான் அவசரமாக் கூப்பிட்டபோது உங்களால் வர முடியவில்லை. இப்போ இனிமேல் இங்கே என்ன வேலை?

கேசவன் (கனிந்த குரலில்) : என்ன ராஜு, உங்கள் மனைவிக்கு உடம்பு எப்படி இருக்கிறது? உள்ளே சென்று பார்க்கலாமே?

ராஜா (கோபமாக): இன்னும் பார்க்கிறதற்கு என்ன இருக்கிறது? நீங்கள் திரும்பிப் போகலாம்—உங்களுக்கு வேறு வேலை ஏதாவது அவசரமாக இருக்கும். அங்கே போகலாம்......

கேசவன்: என்ன, நீங்கள் சொல்லுவது ஒன்றும் புரியவில்லையே?

ராஜா (மேலும் கோபமாக): உங்களுக்கு எப்படிப் புரியும்? மனுஷத்தன்மை, சுவு, இரக்கம் ஏதாவது இருந்தால்தானே உங்களுக்குப் புரியும்? காசு நிறையக் கொடுக்கிறவன் கூப்பிட்டால் எல்லா வேலையையும் விட்டுவிட்டு ஓடுவீர்கள்— ஏழை எளியவர்கள் கூப்பிட்டால் உயிர் போனதுக்கப்புறம் வந்து சேருவீங்க...!

கேசவன் (அதிர்ச்சியடைந்து): ராஜா, நீங்கள் சாயங்காலம் என்னிடம் சொன்னதிலிருந்து நோய் அத்தனை கடுமை என்று நான் நினைக்கவில்லை. ஏதோ மாற்றி மாற்றிச் சொன்னீர்கள்.

ராஜா: நான் என்ன சொன்னேன்? ரொம்ப ஆபத்தாக இருக்குதென்றுதான் சொன்னேன். கெஞ்சிக் கெஞ்சிச் சொன்னேன்.

கேசவன்: என்னவோ எனக்கு அப்படிப் படவில்லை. என்னை மன்னிக்க வேணும். உண்மையாக நான் ரொம்ப வருந்துகிறேன்.

ராஜா (மேலும் கோபமாக): இந்தப் பாசாங்கெல்லாம் என்னிடத்திலே வேண்டியதில்லை. எல்லாம் எனக்குத் தெரியும். இந்த லட்சணத்திலே ஊரெல்லாம் பெரிய பேரு வேறே? ஏழைகளுக்கு இலவசமாக வைத்தியம் பண்ணுகிறதாகப் பாவனை வேறே......?

கேசவன்: ராஜா, இந்தச் சமயத்திலே நீங்கள் எவ்வளவு கோபமாகப் பேசினாலும் நான் அதைக்

கட்டுக்கொள்ள வேண்டியதுதான். நான் கடமை வறிவிட்டேன் என்பதை உணர்ந்துகொண்டேன்.

ராஜு : இப்போ இதெல்லாம் பேசி எனக்கு என்ன ாபம்? இப்படிப் பேசினல் என் மனைவி எழுந்து வந்து டுவாளா? அவளைப்போல ஒருத்தியை நான் மறுபடியும் ார்க்கப் போகிறேனு?

கேசவன் : நிலைமை இப்படி மீறிப் போகுமென்று னைக்காதது என் தவறுதான்.

ராஜு : கலியாணம் செய்து மனைவியின் அருமை தரிந்திருந்தால், அப்போ இப்படி நீங்கள் செய்திருக்க ாட்டீர்கள். இப்போ உங்களுக்கு என்ன தெரியப் போகிறது? என்னுடைய வாழ்நாளையே பாழாக்கியது நான் மிச்சம்.

கேசவன் : நான் போய்வருகிறேன். உங்களுக்கு ந்தச் சமயத்திலே ஆறுதல் சொல்லுவதற்கு நான் குதி யுடையவனல்ல. கடமை தவறியதற்கு நான் ன்னுடைய வாழ்க்கையிலே தகுந்த பிராயச்சித்தம் செய்துகொள்வேன். (தழுதழுக்க) இது சத்தியம்— ன்னை மன்னித்துவிடுங்கள். என் சொந்த இன்பத்தை னைத்துச் சென்று உங்கள் வாழ்க்கையிலே துன்பத்தை ண்டாக்கி விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்.

ராஜு (குரோதத்தோடு) : ஏன் சும்மா போகிறீர்? வந்ததற்கு இதோ பீஸ் வாங்கிக்கொண்டு போங்கள்; ந்த பணத்தைக்கொண்டு நீங்கள் கலியாணம் செய்து கொள்ளுகிறபோது, உங்கள் மனைவிக்கு நகை பண்ணிப் போடுங்கள்.

கேசவன் : என் மனைவிக்கு நகையா?...(சிரிக்கிறான்) ரொம்ப சரி, ஆனல்......இனி, அது அவசியமில்லை. உங்கள் பணமும் எனக்கு வேண்டியதில்லை. டாக்டர்

கேசவன் எப்படிப்பட்டவன் என்பதை இனிமேலாகிலும் நீங்கள் தெரிந்து கொள்வீர்கள். ஏதோ ஒரு தடவை தவறிப்போனேன். அதற்குத் தகுந்த பிராயச்சித்தம் என்ன என்பதும் எனக்குத் தெரியும். அதைச் செய்யாமல் கேசவன் உயிர் வாழமாட்டான்.

[பேசிக்கொண்டே போகிறான். ராஜு அவன் போன திசையை உற்றுப் பார்த்துக்கொண்டே சற்று நேரம் நின்றுவிட்டு வீட்டிற்குள்ளே நுழைகிறான்.]

திரை

## காட்சி நான்கு

[சரோஜாவின் இல்லம். அவள் தாயார் மீனாட்சி உணவருந்திக் கொண்டிருக்கிறாள். அவளுக்கு சுமார் ஐம்பத்தைந்து வயது இருக்கும். மகளே தன் வாழ்க்கையில் எல்லாமென எண்ணியிருக்கிறவள். சரோஜா உணவு பரிமாறுகிறாள். இரவு ஏழு மணி இருக்கும்.]

சரோஜா: அம்மா, இன்னும் கொஞ்சம் சாம்பார் போடட்டுமா?

மீனாட்சி: வேண்டாமம்மா, போதும்.

சரோஜா: ஏன் சாம்பார் நன்றாக இல்லையா, அம்மா? கொஞ்சம் அவசரத்திலே செய்தேன்.

மீனாட்சி: அதனாலே இல்லை சரோஜா. எனக்கேனோ பசியே இல்லை. கொஞ்ச நாளாகவே வாய்க்கு எதுவும் ருசியாக இருப்பதில்லை...என்னவோ சாப்பிட வேணுமே என்றுதான் சாப்பிடுகிறேன். அப்படிச் சாப்பிட்டாலும், சாப்பிட்டவுடனே நெஞ்சிலே அடைக்கிறமாதிரி இருக்கிறது.

சரோஜா : ஏதாவது ஜீரணக் கோளாருக இருக்குமோ என்னவோ? டாக்டரிடத்திலே கேட்கலாமா? மருந்து சாப்பிட்டால் எல்லாம் சரியாகிவிடும். நாளைக்கு டாக்டரிடம் போகலாம்.

மீனுட்சி : இனிமேல் இந்த வயசிலே மருந்து சாப்பிட்டு என்ன ஆகப்போகுது? உன்னை ஒருத்தன் கையிலே பிடித்துக் கொடுத்துவிட்டால், என் கவலையெல்லாம் தீர்ந்து போகும்.

சரோஜா : அம்மா, உனக்கு எப்பப் பார்த்தாலும் அந்தக் கவலைதான். அதனுல்தான் உடம்புகூடக் கெட்டுப்போகிறது.

மீனுட்சி : ஆமாம் சரோஜா. உண்மையிலேஅந்தக் கவலைதான் என்னை வாட்டுகிறது.

சரோஜா (மகிழ்ச்சியோடு) : இனிமேல் உனக்கு அந்தக் கவலை வேண்டாமம்மா. இன்றைக்கு டாக்டர் நிச்சயமாகச் சொல்லிவிட்டார்.

மீனுட்சி : அவரைப் பார்க்கத்தான் அவசரம் அவசரமாகச் சாயங்காலம் வெளியே போயிருந்தாயா? டாக்டர் என்ன சொன்னுர்?

சரோஜா (முகத்தில் சற்று நாணத்தோடு) : சீக்கிரமாகக் கலியாணத்திற்கு ஏற்பாடு செய்யலாமென்று சொன்னுர்.

மீனுட்சி : நிஜமாகவா சரோஜா?

சரோஜா : நிஜமாகத்தான் அம்மா. உனக்கு ஏதுக்கு இந்தச் சந்தேகம்?

மீனுட்சி : அவர்களெல்லாம் பெரிய இடத்தைச் சேர்ந்தவர்கள். நம்மைச் சரியாக மதிப்பார்களா?

சரோஜா : அம்மா டாக்டரை நீ அப்படி நினைக்கப் படாது.

மீனாட்சி : எனக்கென்னவோ மனசுக்குச் சமாதானமே இல்லை சரோஜா.

சரோஜா : அம்மா, டாக்டரைப்பற்றி நான் சொன்ன நாள் முதற்கொண்டு நீ இப்படித்தான் சொல்லிக்கொண்டே இருக்கிறாய்.

மீனாட்சி : ஆமாம் சரோஜா. உன்னுடைய மனசு போல நீ கலியாணம் பண்ணிக்கவேணும் என்கிறதுதான் என்னுடைய ஆசையாக இருந்தாலும், * எனக்கு இந்த விஷயம் கவலையாகவே இருக்கிறது.

சரோஜா : இனிமேல் உனக்குக் கவலையே வேண்டியதில்லை.

மீனாட்சி : டாக்டர் இஷ்டப்பட்டாலும் அவருடைய சொந்தக்காரரெல்லாம் இந்தக் கலியாணத்திற்குச் சம்மதிக்கவே மாட்டார்கள்.

சரோஜா : ஏன் சம்மதிக்கமாட்டார்கள்?

மீனாட்சி : ஏனு? டாக்டர் மட்டும் இதைப்பற்றி அவர்களிடம் சொல்லிப் பார்க்கட்டும். அப்போது தெரியும். அவர்களெல்லாம் டாக்டரைக் கேலி பண்ண ஆரம்பித்துவிடுவார்கள்.

சரோஜா : கேலியா? இதிலே கேலி பண்ணுவதற்கு இடமேது? நாம் என்ன தீண்டாத ஜாதியா? எனக்கென்ன படிப்புக் கிடையாதா? நம்மைப்பற்றி அவர்கள் எந்தவகையிலே குறைகூற முடியும்?

மீனாட்சி : நம்ம குடும்பம் சாதாரண குடும்பம். நமக்கு இந்தப் பக்கத்திலே பந்துக்கள்கூட இல்லை. நீ

ஆசைப்படுகிறாய் என்றுதானே பட்டணத்திலே நம்ம வீட்டைக்கூட விட்டுவிட்டு இங்கே வந்து குடியிருக்கிறோம்.

சரோஜா : ஆமாமம்மா, அதிலென்ன?

மீனாட்சி : டாக்டர் பெரிய பணக்காரக் குடும்பத்திலே பிறந்தவர். அவருடைய சொந்தக்காரர்களெல்லாம் பெரிய பெரிய இடத்தைச் சேர்ந்தவர்கள். எத்தனையோ பணக்காரர்கள் டாக்டருக்குப் பெண் கொடுக்கக்காத்திருப்பார்கள். சொந்தக்காரர்களெல்லாம் பெரிய இடத்தைத்தான் விரும்புவார்கள்.

சரோஜா : யார் என்ன சொன்னாலும் டாக்டர் மாறமாட்டார்.

மீனாட்சி : அவர் மாறாமலிருந்தால் நல்லதுதான்... ஆனால், அவர் மாறிப்போனாலோ உனக்குத்தான் கஷ்டம். அவருக்கு ஒரு குறைவும் வராது. உன் வாழ்க்கைதான் கெட்டுப்போகும்.

சரோஜா : எப்படியம்மா கெட்டுப்போகும்?

மீனாட்சி : சரோஜா நீ உலகந் தெரியாத குழந்தை. டாக்டரைக் கலியாணம் செய்துகொள்வதாக இருந்த விஷயம் வெளியே தெரிந்ததும், ஊரிலே என்னென்னவோ பேச ஆரம்பித்துவிடுவார்கள். கலியாணம் நீ நினைக்கிறபடியே நடந்துவிட்டால் ஒன்றும் இல்லை— அது நின்றுபோனால் அப்புறம் உன்னைக் கட்டிக்கொள்ள யாருமே வரமாட்டார்கள்.

சரோஜா : அம்மா, இந்தச் சந்தேகத்துக்கே இடம் கிடையாது. உனக்கு டாக்டரைப்பற்றி நன்றாகத் தெரியாது. அவர் மகா உத்தமர். உன்னிடத்திலேயே நாளைக்கு வந்து உறுதிசொல்லப் போகிறார் பார்.

[வெளியில் கார் வந்து நின்று ஹாரன் அடிக்கும் சப்தம் கேட்கிறது.]

அதோ, அது டாக்டர் கார்தான். அவர் இப்பொழுதே வந்திருக்கிறார். இனி உனக்கென்ன சந்தேகம் அம்மா?

மீனாட்சி : சரோஜா, போய்க் கதவைத் திறந்துவிடு. நான் சீக்கிரமாகக் கையலம்பிக் கொண்டு வருகிறேன்.

[மீனாட்சி அவசரமாக எழுந்து கையலம்பச் செல்லுகிறாள். சரோஜா ஆவலோடு வீட்டுக் கதவைத் திறக்க விரைகின்றாள். அவள் முகத்தில் மகிழ்ச்சி பொங்கிக்கொண்டிருக்கிறது.]

திரை

## காட்சி ஐந்து

[கேசவன் வீட்டு வாயிலருகில் நிற்கிறான். வீதி விளக்கு வெளிச்சம் மங்கலாக அவன்மேல் விழுகிறது. அவன் முகம் இருண்டு தோன்றுகிறது. சரோஜா வீட்டின் வெளிக் கதவைத் திறந்து கொண்டு ஆவலோடு வெளியே வருகிறாள்.]

சரோஜா (ஆவலோடு) : கேசவ், இப்பவே அம்மாவைப் பார்த்துச் சொல்ல வந்தீர்களா? நானும் இப்பொழுதுதான்...

கேசவன் : இல்லை சரோஜா, அம்மாவைப் பார்க்க வேண்டிய அவசியம் இனிமேல் இல்லை. நான் சொல்ல வந்தது வேறு விஷயம்?

சரோஜா (சற்றுக் கவலை தோன்ற) : என்ன? ஏதோ கலக்கத்தோடு இருக்கிறீர்களே?

கேசவன்: நான் பெரிய தவறு செய்துவிட்டேன். என்னுடைய சுகத்தைப் பெரிதாக நினைத்து என் கடமையைக் காற்றில் பறக்க விட்டுவிட்டேன்.

சரோஜா: நீங்கள் சொல்லுவது எனக்கு விளங்கவில்லை, கேசவ். வாருங்கள், உள்ளே சென்று சாவகாசமாகப் பேசலாம், உள்ளே வாருங்கள்.

கேசவன்: நான் உங்கள் வீட்டுக்குள்ளே இனி வர வேண்டிய அவசியமில்லை. நான், நான், கலியாணம் செய்துகொள்ளப் போவதில்லை.

சரோஜா (திடுக்கிட்டு): என்ன, என்ன சொன்னீர்கள்? நாம் பிரிந்து அரைமணி நேரங்கூட ஆகவில்லையே? அதற்குள் என்ன நேர்ந்தது?

கேசவன்: உன்னைத் தனியாகப் பூங்காவில்சந்திக்க வேண்டுமென்ற ஆவலிலே அந்த ராஜுவின் மனைவியைச் சாக வைத்துவிட்டேன். நான்தான் அதற்குப் பொறுப்பாளி. ஒருவன் தன் ஆசை மனைவியை இழக்கச் செய்த எனக்கு இனிக் கலியாணம் வேறு வேண்டுமா? மனைவியோடு வாழ எனக்கு இனி யோக்கியதை ஏது?

சரோஜா (கவலையோடு): என்ன? ராஜு மனைவி இறந்துவிட்டாளா?

கேசவன்: ஆமாம். நான் அவளைப் பார்ப்பதற்கு முன்னாலேயே அவள் இறந்துவிட்டாள். மனைவியை இழந்தவனுடைய பரிதவிப்பைத்தான் நான் பார்க்கச் சென்றேன்.

சரோஜா: கேசவ். உள்ளே செல்லுவோம் வாருங்கள்—அமைதியாக இருந்து ஆலோசனை செய்யலாம்.

கேசவன்: இனி எனக்கு அமைதி ஏது? ஆலோசனை ஏது? நான் உள்ளே வரமாட்டேன். அம்மாளிடம் விஷயத்தைச் சொல்லிவிட்டாயா?

சரோஜா: இப்பொழுதுதான் பேசிக்கொண்டிருந்தேன். நீங்களே நேரில் வந்து தெரிவிப்பீர்கள் என்றும் சொன்னேன்.

கேசவன்: நீ சொல்லியிருந்தாலும் அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. என் நிர்மானத்தை இனி மாற்ற முடியாது. நான் கலியாணம் செய்துகொள்ளப் போவதில்லை...

சரோஜா (கலவரத்தோடு): கேசவ்...?

கேசவன்: சரோஜா, நான் இப்பொழுது சொல்லுவது முடிவான வார்த்தை. நான் எனது கடமையில் தவறிப்போனதால் அதற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ளப் போகிறேன். என் வாழ்நாளை மக்களுடைய சேவைக்காக முழுக்க முழுக்க அர்ப்பணம் செய்யப் போகிறேன்.

சரோஜா: அதிலே நான் இடைஞ்சலாக இருப்பேனென்று நினைக்கிறீர்களா?

கேசவன்: அதைப்பற்றி நினைப்பதற்கு இப்பொழுது இடமில்லை. ஒருவன் தன்னுடைய மனைவியை இழப்பதற்கு எனது சுயநலமே காரணமாயிருந்தது. நான் உடனே சென்று கவனித்திருந்தால், ஒருவேளை ராஜு மனைவி பிழைத்திருக்கலாம். அதைச் செய்ய நான் தவறிவிட்டேன். இந்தத் தவறுக்கு நான் பரிகாரம் தேடியாகவேண்டும். எனது இன்பத்தை நான் மறந்தாக வேண்டும்.

சரோஜா (கண்களில் நீர் ததும்ப): நீங்கள் நினைப்பது ஒருவகையில் சரியாக இருக்கலாம். ஆனால், உங்களையே எல்லாமென நம்பியிருக்கும் என்னை மறந்துவிட்டீர்களே என்றுதான் என் உள்ளம் குமுறுகிறது. என்னுடைய கதி...?

கேசவன் : சரோஜா, என்னை நீ மறந்துவிடு. நான் இப்பொழுது பழைய கேசவன் அல்ல. மக்களுடைய சேவையிலே என்னையே நான் மறந்துவிடப் போகிறேன்.

[திரும்பிப்பாராமல் போகிறான். சரோஜா விம்மிக் கொண்டு நிற்கிறாள். அழுதுகொண்டே வீட்டிற்குள் போக முயல்கிறாள்.]

திரை

## காட்சி ஆறு

[அதே இரவு சுமார் ஒன்பது மணி இருக்கும். டாக்டர் கேசவனுடைய மாளிகையின் முன்புறம். வீதி விளக்கின் மிக மங்கலான ஒளிதான் இருக்கிறது. ராமன் உள்ளேயிருந்து தாழ்வாரத்திற்கு வந்து படுப்பதற்கு ஆயத்தம் செய்துகொண்டிருக்கிறான். அந்தச் சமயத்தில் சரோஜா வேகமாக நுழைகிறாள்.]

ராமன் : யாரு, சரோஜா அம்மாவுங்களா? வாங்க, என்னமோ அவசரமா வந்திருக்கிறீங்களே?

சரோஜா : ராமா, டாக்டர் வீட்டில்தானே?

ராமன் : ஆமாம்மா. படுத்திருக்கிறாரு. வெளியிலே போயிட்டு எட்டுமணி சுமாருக்கு வந்தாரு. சாப்பிடக்கூட இல்லே, அப்படியே படுத்திருக்கிறாரு.

சரோஜா : அவரிடத்திலே சொல்லு, நான் அவரை அவசரமாகப் பார்க்கவேணும்.

ராமன் : இப்போ எழுப்பினால் என்ன சொல்லுவாரோ? என்னமோ சோர்ந்துபோயி வந்தாரு...முகத்தைப் பார்க்கவே நல்லா இல்லே.

சரோஜா : இருந்தாலும் நான் பார்த்துத் தானாக வேணும்—அவரை எழுப்பி நான் வந்திருக்கிறதாகச் சொல்லு.

ராமன் : என்னமாவது உடம்புக்குச் சரியில்லையா அம்மா?

சரோஜா : அதெல்லாம் நான் டாக்டரிடம் சொல்லிக்கொள்ளுகிறேன். நீ போய் அவரிடம் நான் பார்க்கவேணுமென்று சொல். அவசரம்.

ராமன் : சரியம்மா. இப்படி நாற்காலியிலே உட்காருங்கள், வெளி விளக்கைப் போட்டு வைக்கட்டுங்களா? இருட்டாக இருக்குது.

சரோஜா : ஆமாம், விளக்கைப் போட்டுவிட்டுப் போய் டாக்டரிடம் சொல்லு. சீக்கிரமாகப் போ.

[ராமன் மின்சார விளக்கைப் போட்டுவிட்டு நாற்காலி ஒன்றை, சரோஜா அமருவதற்காக எடுத்து வருகிறான். பிறகு கேசவனிடம் கூற உள்ளே செல்லுகிறான். சரோஜா நாற்காலியில் உட்காராமல் நடமாடிக்கொண்டிருக்கிறாள். அவளிடத்திலே ஒரு பரபரப்புக் காண்கிறது. முகத்திலேகவலைகுடிகொண்டிருக்கிறது. சற்று நேரத்தில் ராமன் வெளியேவருகிறான்.]

சரோஜா : (ஆவலோடு) ராமா, டாக்டரைப் பார்க்கலாமா?

ராமன் : இல்லையம்மா? இப்பப் பார்க்க முடியாதுன்னு சொல்லிவிட்டார்.

சரோஜா: அவசரமான காரியமென்று சொன்னாயா?

ராமன்: ஆமாம்மா—அப்படித்தான் சொன்னேன். உங்களிடத்திலே சொல்ல வேண்டியதை யெல்லாம் முன்னமேயே சொல்லிவிட்டாராம். இனிமேல் பார்க்க வேண்டியதில்லை என்று சொல்லுகிறார். என்னவோ

அம்மா, கோபமா இருக்கிருர். ஒருநாளும் இப்படி இருக்கமாட்டார். அதிலும் நீங்கள் வந்திருக்கிறபோது...

சரோஜா : அம்மா மூர்ச்சையாக மயங்கிக் கிடக்கிருளென்று சொன்னுயா?

ராமன் (திடுக்கிட்டு) : நம்ம அம்மாவுங்களா? அதை நீங்கள் என்னிடத்திலே சொல்லலையே?

சரோஜா : அதற்காகத்தான் டாக்டரிடம் ஓடி வந்தேன். அவரிடத்திலே போய்ச் சொல்லு—அம்மா திடீரென்று மயங்கி விழுந்துவிட்டார்கள். பேச்சே கிடையாது. விஷயத்தைச் சொல்லிவிடு. பிறகு அவருக்கு இஷ்டமாக இருந்தால் வந்து பார்க்கட்டும். இல்லாவிட்டால் தெய்வம் விட்டபடி ஆகிறது. நான் போய்ப் பக்கத்திலேயாவது இருக்கிறேன். அங்கே யாருமில்லை. நீ டாக்டரிடம் சொல்லிவிடு. நான் போய்விட்டதாகவும் சொல்லு.

[வேகமாக வீட்டை நோக்கிப் போகிருள். ராமன் கவலையோடு அவளைப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு அவள் மறைந்ததும் உள்ளே செல்லுகிருன்.]

திரை

## காட்சி ஏழு

[கேசவன் சாய்வு நாற்காலியில் படுத்துக்கொண்டு ஆழ்ந்த யோசனையிலிருக்கிருன். விளக்கு மங்கலாக எரிந்துகொண்டிருக்கிறது. ராமன் மெதுவாக வந்து முன்னுல் நிற்கிருன்.]

கேசவன் : என்ன ராமா, மறுபடியும் எதற்கு இங்கே வந்து நிற்கிருய்?

ராமன் : ஸார், சரோஜா அம்மா அவுங்க தாயாருக்கு ரொம்ப ஆபத்தா இருக்குதுங்களாம்.

கேசவன் (சட்டென்று எழுந்து உட்கார்ந்து): என்ன, என்ன?

ராமன்: சரோஜா அவுங்க அம்மா இல்லீங்க? மீனாட்சி அம்மா? அவுங்க திடீர்னு மயக்கம் போட்டு விழுந் துட்டாங்களாம். பிரக்ஞை தப்பிக்கிடக்கிறாங்களாம்.

கேசவன் (எழுந்துகொண்டே): ஏண்டா, இதை யேன் என்னிடத்திலே அப்பவே சொல்லவில்லே?

ராமன்: சரோஜா அம்மா இப்பத்தானுங்க சொன் னாங்க.

கேசவன்: இப்போ சரோஜா எங்கே?

ராமன்: வீட்டிலே யாருமில்லேன்னு என்னிடத் திலே சொல்லிட்டு ஓடினாங்க.

கேசவன் (எழுந்து யோசனையோடு நடமாடிக் கொண்டே): வேறு ஒன்றும் சொல்லவில்லையா?

ராமன்: உங்களிடம் விஷயத்தைச் சொல்லச் சொன்னாங்க. அப்புறம் ஈஸ்வரன் விட்டபடி ஆகட்டும்னு சொல்லிட்டுப் போனாங்க.

கேசவன்: ......ம்......ராமா.

ராமன்: மருந்துப் பெட்டியை எடுத்துக் காரிலே வைக்கட்டுங்களா? பாவம் அந்த அம்மா நிலைமை எப்படி இருக்குதோ?

கேசவன் (திடீரென்று முடிவுக்கு வந்தவன்போல்): சரி......ராமா......பெட்டியை எடுத்துக் காரிலே வை..... சீக்கிரம்.

[ராமன் பெட்டியை எடுத்துக்கொண்டு வெளியே போகிறான். கேசவன் புறப்படத் தயா ராகிறான்.]

திரை

## காட்சி எட்டு

[சரோஜாவின் வீடு. மீனாட்சியைப் பரீட்சை செய்து சிகிச்சை செய்துவிட்டு வேறொரு அறையில் கேசவன் வந்து சற்றுத் தாமதிக்கிறான். சரோஜா கவலையோடு பின் தொடர்ந்து வருகிறாள்.]

சரோஜா (கவலை படிந்த முகத்துடன்) : டாக்டர், அம்மாளுடைய நிலைமை எப்படி இருக்கிறது?

கேசவன் : ஒன்றும் ஆபத்தில்லை. ஆனால் இருதயம் மிகவும் பலஹீனப்பட்டிருக்கிறது.

சரோஜா : இன்னும் மயக்கம் தெளியவில்லையே?

கேசவன் : இன்னும் அரைமணியில் பிரக்ஞை வந்து விடும். இப்பொழுது ஒரு ஊசி போட்டிருக்கிறேன். அதனாலே இருதயத்துக்குக் கொஞ்சம் பலம் வரும். ஆனால், அப்படியே படுத்திருக்கவேணும், எழுந்திருக்கவே கூடாது. நீ போய்ப் பக்கத்தில் இரு. அம்மாள் விழித்தவுடன் அவர்களைத் தைரியமாக இருக்கச் சொல்லு. அவர்களைப் பேசவிடாதே.

சரோஜா (கவலையோடு) : உயிருக்கு ஒன்றும் ஆபத்தில்லையே டாக்டர்?

கேசவன் : அப்படி ஒன்றும் நேராதென்றுதான் நினைக்கிறேன். இரண்டு மூன்றுமாதம் படுக்கையிலேயே இருக்கவேண்டி ஏற்படலாம். நல்ல சிகிச்சையும் தேவை. முன்னாலே உடம்புக்கு ஏதாவது சரியில்லாமல் இருந்ததா?

சரோஜா : அப்படியொன்றும் தொந்தரவிருக்கவில்லை. ஏதோ உணவிலே ருசியே இருக்கிறதில்லை

யென்று இன்றைக்குத்தான் சொல்லிக்கொண்டிருந் தாள்.

கேசவன் (சற்று யோசனை செய்துவிட்டு) : அம்மா ளிடம் நான் கலியாணம் செய்துகொள்ளப் போவதில்லை என்கிற விஷயம் சொன்னுயா?

சரோஜா : ஆமாம், அதைப்பற்றியெல்லாம் கேட்ட பிறகுதான் மயக்கம் போட்டு விழுந்துவிட்டாள்.

கேசவன் (திகைப்புற்று நின்று) : திடீரென ஏற் பட்ட அதிர்ச்சிதான் காரணமாக இருக்க வேண்டும். முதல் இருபத்துநாலு மணி நேரம் ரொம்ப ஜாக்கிரதை யாகக் கவனிக்க வேண்டும்; பக்கத்திலே யாராவது இருந்து பார்த்துக் கொண்டிருந்தால் நல்லது.

சரோஜா : நான் பார்த்துக்கொள்கிறேன் டாக்டர்.

கேசவன் : நீயே எப்படி இரவு முழுவதும் விழித் திருப்பாய்? இன்னொருவர் யாராவது கூட இருந்தால் நல்லது.

சரோஜா : எனக்கு இந்த ஊரிலே வேறு யாரிருக் கிருர்கள்?

கேசவன் : நான் ஒரு நர்ஸை அனுப்புகிறேன். அதோடு ஆக்சிஜன் சிலிண்டரும் அனுப்பி வைக்கிறேன்.

சரோஜா (கவலையோடு) : ஆக்சிஜன் கொடுக்க வேணுமா?

கேசவன் : கொடுத்தால்தான் நல்லது. அதோடு மூன்று நான்கு மாதம் படுக்கையிலேயே வைத்து சிகிச்சை பண்ணவேண்டும். சில நாட்களில் கொஞ்சம் பலம் வந்த வுடன் நம்ம ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்வது நல்லது. அங்கே வைத்து நான் எல்லாம் கவனிக்கிறேன். நீ கவலைப்பட வேண்டியதில்லை,

சரோஜா : ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லாமல் முடியாதா, டாக்டர்?

கேசவன் : அங்கே இருந்தால்தான் இரவு பகல் எந்த நேரமும் நான் கவனித்துக்கொள்ள முடியும். நர்ஸ்களும் எப்பொழுதும் இருப்பார்கள்.

சரோஜா : அப்படி அம்மாவை அங்கே கொண்டு போய் நீண்டநாள் வைத்திருக்க வேண்டுமானால் நான் உங்களிடத்திலே ஒரு விஷயம் கேட்டுக்கொள்ள வேணும்.

கேசவன் : என்ன விஷயம்?

சரோஜா : உங்கள் ஆஸ்பத்திரியிலேயே நோயாளிகளுக்குப் பணிவிடை செய்யும் வேலை எனக்குக் கொடுங்கள்.

கேசவன் : உனக்கு வேலையா? அது சரிப்படாது. நீ அங்கே வேலை செய்கிறதென்பது முடியாத காரியம்.

சரோஜா (சற்றுக் கண்டிப்பாக) : அப்படியானால் அம்மாளுக்கும் அங்கே சிகிச்சை செய்யவேண்டியதில்லை. தருமத்திற்கு வைத்தியம் செய்துகொள்ள நான் இன்னும் அவ்வளவு கேவலமாகப் போய்விடவில்லை.

கேசவன்: அம்மாளைச் சரியாகக் கவனிக்காவிட்டால் அவர்களுடைய உயிருக்கே ஆபத்து நேரலாம். இந்த இருதய நோய் சாதாரணமானதல்ல.

சரோஜா : அம்மா என்றும் சிரஞ்சீவியாக இருப்பாள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. சாவு வருவது நிச்சயமானால் அதை உங்களாலும் தடுக்க முடியாது.

கேசவன் : சரோஜா, நீ பேசுவது வேடிக்கையாக இருக்கிறது. ஆஸ்பத்திரியில் வேலை செய்ய உனக்குப்

பயிற்சி கிடையாது. மேலும், நீ யாரையாவது கலியாணம் செய்துகொண்டு வாழ்க்கை நடத்தவேண்டுமென்பது என்னுடைய விருப்பம்.

சரோஜா : உங்களுக்கு அபிப்பிராயம் இருப்பது போல மற்றவர்களுக்கும் அவர்களுடைய தனி அபிப்பிராயம் இருக்கத்தான் செய்யும். எனது வாழ்க்கையைப் பற்றித் திட்டம் வகுக்கத் தெரியாத அளவுக்கு நான் அத்தனை முட்டாள் அல்ல.

கேசவன் : நீ என்னதான் செய்ய விரும்புகிறாய்?

சரோஜா : நீங்கள் டாக்டராக இருந்து மக்களுக்கு வாழ்நாள் முழுவதும் சேவை செய்ய ஆசைப்படுகிறீர்கள். நான் ஒரு நர்ஸாக இருந்து அவர்களுக்குச் சேவை செய்து அதிலேயே என் வாழ்நாளைக் கழிக்க ஆசைப்படுகிறேன். நான் கலியாணம் செய்துகொள்ளப் போவதில்லை.

கேசவன் : சரோஜா, இது மிகக் கடுமையான காரியம். எப்பொழுதுமே இதே உறுதியோடு இருக்க முடியாது. பின்னால் வருத்தப்படுவாய்.

சரோஜா : மன உறுதியென்பது ஏதோ சிலருக்குத்தான் தனி உடைமை என்று நீங்கள் நினைப்பதானால், அது தவறு என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

கேசவன் : சரோஜா, அம்மாளுக்கு உடம்பு கெட்டுப்போனதை நினைத்து நீ இப்படித் தீர்மானம் செய்வது சரியல்ல என்றுதான் நான் சொல்லுகிறேன்.

சரோஜா : ஏதாவது நெருக்கடியான நிலைமை ஏற்படும்போதுதான் எல்லோரும் முக்கியமான தீர்மானம் செய்கிறார்கள். அந்தத் தீர்மானத்தில் உறுதியாக நிற்பது அவர்களுடைய மனத் திடத்தைப் பொறுத்திருக்கிறது. மேலும், நான் இந்தத் தீர்மானத்திற்கு

அம்மாள் மயக்கமடைந்து விழுந்த பிறகு வரவில்லை. எனது தீர்மானத்தைக் கேட்டுத்தான் அம்மாள் மூர்ச்சை போட்டு விழுந்தாள்.

கேசவன் : நிஜமாகவா சரோஜா?

சரோஜா : பொய் பேசி எனக்குப் பழக்கம் கிடையாது.

கேசவன் : நீ பொய் பேசுவதாக நான் சொல்லவில்லை. ஆனால், என்னிடத்தில் இதை நீ முன்னால் சொல்லவில்லையே? நான் கலியாணம் செய்துகொள்ளப் போவதில்லை என்பதைக் கேட்டதும் அம்மாள் மயக்கம் போட்டு விழுந்ததாகத்தானே சொன்னாய்?

சரோஜா : எனது சொந்தத் தீர்மானத்தைப்பற்றி உங்களிடம் சொல்ல வேண்டியதில்லை என்று அப்பொழுது நினைத்தேன். பட்டணத்துக்குப் போய் அங்கே நர்ஸாக வேலை செய்வதென்று தீர்மானித்திருந்தேன். ஆனால் இப்பொழுது நிலைமை அதற்கு இடங் கொடுக்காததால் உங்கள் ஆஸ்பத்திரியில் வேலை கேட்கிறேன். அம்மாளை இந்த நிலையிலே நான் சென்னைக்குக் கொண்டு போக முடியாது.

கேசவன் : நர்ஸாக வேலை செய்வதற்கு உனக்குப் பயிற்சி கிடையாதே?

சரோஜா : பிறக்கும்போதே யாரும் நர்ஸாகப் பிறந்துவிடவில்லை. நான் அந்த வேலையைச் சுலபமாகக் கற்றுக்கொள்ள முடியும்.

கேசவன் (சற்று யோசித்து) : சரி, சரோஜா, உன் விருப்பப்படியே ஆஸ்பத்திரியில் வேலை செய்யலாம்... ஆனால்...நீ தனிப்பட்ட சலுகை ஒன்றும் எதிர்பார்க்கக் கூடாது.

சரோஜா : நான் அப்படி ஒன்றும் எதிர்பார்க்க மாட்டேன். மற்ற ஊழியர்களுக்குக் கிடைக்கும் மரி யாதை எனக்குக் கிடைத்தால் போதும்...இந்த வகையி லாவது உங்களுக்குப் பக்கத்திலிருந்து மக்களுக்குச் சேவை செய்யும் வாய்ப்புக் கிடைத்தால் அதே போதும்.

கேசவன் : கல்லூரியில் படிக்கிற காலத்திலிருந்து நாம் ஒருவரையொருவர் தெரிந்துகொண்டிருக்கிறோம். அதையெண்ணி அதிகமான தொடர்பு வைத்துக் கொள்ள நினைக்கக் கூடாது.

சரோஜா : நீங்கள் குறிப்பிடுகிற விஷயம் எனக்குப் புரியாமலில்லை. நான் உங்களுடைய தீர்மானத்திற்குப் பங்கம் ஏற்படுமாறு ஒருவகையிலும் நடக்கமாட்டேன்.

கேசவன் : சரி சரோஜா, நீ மன உறுதியோடு இருக்கும் வரையில் எனக்கு ஆட்சேபமில்லை...நான் போய் நர்ஸை உடனே அனுப்புகிறேன்.

[புறப்பட்டுப் போகிறான். கையில் வைத்தியப் பெட்டி இருக்கிறது. சரோஜா பார்த்துக் கொண்டு நிற்கிறாள்.]

திரை

# இரண்டாம் அங்கம்

## காட்சி ஒன்று

*[கேசவனுடைய ஆஸ்பத்திரியில் ஓர் அறை. மீனாட்சி ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்திருக்கிறாள். பக்கத்திலே ஒரு கட்டில் இருக்கிறது. நர்ஸ் உடையில் சரோஜா நின்று தாயாரைக் கவனித்துக்கொண்டிருக்கிறாள். காலை நேரம். சுமார் ஒன்பது மணியிருக்கும்.]*

மீனாட்சி : சரோஜா, ஆஸ்பத்திரிக்கு வந்து நாலு மாசத்திற்கு மேலாகிறது. இனியாவது வீட்டுக்குப் போகலாமா? எனக்கு இப்போ உடம்புக்கு நன்றாகத் தானே இருக்கிறது?

சரோஜா : போகலாம் அம்மா. டாக்டரும் அப்படித்தான் சொன்னார். இனிமேல் பயம் இல்லை அம்மா. மருந்துகூடச் சாப்பிட வேண்டியதில்லை.

மீனாட்சி : என்னைப்பற்றி எனக்கு எப்பொழுதும் பயமில்லை. உன்னைப்பற்றித்தான் எனக்குக் கவலையாக...

சரோஜா : இந்த மாதிரி கவலைதான் கூடாதம்மா. மனதை அலட்டிக்கொள்ளாமல் இருக்கவேணுமென்று

டாக்டர் சொல்லுகிறார். இல்லாவிட்டால் இந்த நோய் திரும்பவும் வந்தாலும் வந்துவிடுமாம்.

மீனாட்சி : உன்னைப்பற்றிக் கவலைப்படாமல் எப்படி இருக்கமுடியும் சரோஜா?

சரோஜா : நான்தான் அன்றைக்கே தீர்மானம் செய்துவிட்டேனே? இனிமேல் என்னைப்பற்றி எதுக்குக் கவலை?

மீனாட்சி : அதெல்லாம் சரியில்லை சரோஜா. ஆண் பிள்ளையென்றால் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். பெண்கள் அப்படி இருக்க முடியுமா?

சரோஜா : ஏன் இருக்கப்படாது? பெண்ணென்றால் கலியாணம் பண்ணிக்கொண்டுதான் ஆகவேணுமென்று கட்டாயமா?

மீனாட்சி : நீ இன்னும் உலகம் தெரியாமல் பேசுகிறாய். நானிருக்கிற வரையில் உனக்குப் பயமில்லை. அதற்கப்புறம் உனக்கு யார் துணை? இருந்த பந்துக்களையும் உதறித் தள்ளிவிட்டு இங்கே வந்துவிட்டோம்.

சரோஜா : எனக்கு எதற்காக இன்னொருத்தருடைய துணை வேணும்? நான் தனியாகவே இருக்க முடியும்.

மீனாட்சி : இப்பொழுதுதான் என்னமோ வேலை செய்கிறாய். கொஞ்சம் வயசாகி, சக்தி குறைந்துபோனால் பிறகு என்ன செய்கிறது? நமக்கென்ன சொத்தா நிறைய இருக்கிறது? அப்பா சம்பாதித்த கொஞ்சம் பணமும் உன் படிப்புக்கே சரியாகிவிட்டது. பட்டணத்திலிருக்கிற அந்த வீடு ஒன்றுதான் மிச்சம். அதற்கும் இப்போ வாடகை வருவது குறைந்துபோய்விட்டது.

சரோஜா: அம்மா, அந்தக் கவலையெல்லாம் உனக்கு வேண்டாம். நோயால் கஷ்டப்படுகிற மக்களுக்குச் சேவை பண்ணுகிறதிலே எனக்கு அளவில்லாத சந்தோஷம் இருக்கிறது. அது போதும்.

மீனாட்சி (சற்றுக் கோபமாக): உன்னைப் படிக்க வைத்ததே தப்பாகப் போய்விட்டது.

சரோஜா: (சமாதானம் செய்யும் வகையில்): அம்மா, நான் சந்தோஷமாக வாழவேண்டுமென்று தானே படிக்கவைத்தீர்கள்? இப்பொழுது நான் மிகுந்த சந்தோஷத்தோடிருக்கிறேன். உன்னைப்பற்றித்தான் எனக்குக் கவலையெல்லாம்.

மீனாட்சி: படிக்கவைக்காமலிருந்தால் இந்த டாக்டரை நீ பார்த்தே இருக்கமாட்டாய்.

சரோஜா: அம்மா, மக்களுக்குச் சேவை செய்யும் பாக்யம் எனக்கு இந்த டாக்டரால்தான் கிடைத்தது. அதற்காக நீ சந்தோஷப்படவேணும்.

மீனாட்சி: நான் டாக்டரிடத்திலே பேசிப் பார்க்கட்டுமா?

சரோஜா: என்ன பேசப்போகிறாய்?

மீனாட்சி: அந்த ராஜா இப்போ சந்தோஷமாகத் தானே இருக்கிறான்?

சரோஜா: அவனைப்பற்றித்தான் நேற்றுக்கூட உனக்குச் சொன்னேனே? அவன் மனைவி இறந்துபோய் மூன்று மாதங்கூட ஆகவில்லை; அதற்குள்ளே வேறொரு பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டான். நாகவல்லி என்பது அந்தப் பெண்ணின் பெயர். இப்போது இரண்டு பேரும் ரொம்ப சந்தோஷமாகத்தான் இருக்கிறார்கள்.

மீனாட்சி : இதெல்லாம் உனக்கு எப்படித் தெரிந்தது?

சரோஜா ; இங்கே வேலைக்காரன் ராமன் இருக்கிறானே, அவன்தான் முதலில் எனக்குச் சொன்னான். அப்புறம் ஒருநாள் ராஜுவையும் நாகவல்லியையும் நானே நேரில் பார்த்தேன்.

மீனாட்சி : எங்கே பார்த்தாய்?

சரோஜா : நாகவல்லிக்கு ஏதோ கொஞ்சம் உடம்புக்கு ஆகவில்லை. மூழுகாமல் இருக்கிறாள் போலிருக்கிறது. அடடா, அதற்கு அவன் பட்ட அவஸ்தை—அதைப் பார்க்க வேணுமே! அவர்கள் இரண்டுபேரும் அப்படி அன்போடிருக்கிறார்கள்.

மீனாட்சி : அதைப் பற்றித்தான் டாக்டரிடம் சொல்லலாமென்றிருக்கிறேன். ராஜு சந்தோஷமாக இருக்கிறானென்று தெரிந்தால் டாக்டர் தம் மனசை மாற்றிக்கொள்ளுவார்.

சரோஜா : அம்மா வேண்டவே வேண்டாம். டாக்டர் கோபித்துக்கொள்ளுவார். அவர் மனசை அப்படிச் சுலபமாக மாற்ற முடியாது.

மீனாட்சி : பின்னே என்னதான் செய்வதுசரோஜா? நீயோ கல்யாணம் பண்ணிக்கிறதானால் அவரைத்தான் பண்ணிக்கொள்வேனென்று பிடிவாதமாக இருக்கிறாய். இரண்டுபேரும் இப்படி இருந்தால் வேறு என்னதான் பண்ணுவது?

சரோஜா (சாந்தமாக) : ஒன்றுமே பண்ண வேண்டாம். இப்பொழுது இருக்கிறது போலவே இருந்தால் போதும்.

மீனாட்சி : அப்போ உனக்குக் கலியாணமே வேண்டாமா? டாக்டர் சம்மதித்தாலும் உனக்கு வேண்டாமா?

சரோஜா : ஏம்மா, இந்த விஷயத்தில் என் மன செல்லாம் உனக்குத் தெரியாதா? டாக்டர் சம்மதித்தால் எனக்கு என்ன ஆட்சேபம் இருக்க முடியும்? ஆனால், அவர் கோபித்துக்கொண்டு என்னை இந்த இடத்திலே வேலை செய்யக்கூடாது என்று சொல்லிவிடக்கூடாது—அதுதான் எனக்குக் கவலை.

மீனாட்சி : நானாகவே டாக்டரிடம் பேசிப் பார்க்கிறேன். நீ அதிலே சம்பந்தப்படவேண்டாம். உன்னிடத்திலே கேட்டதாகவே நான் சொல்லப் போகிறதில்லை. அப்போ சரிதானே?

சரோஜா : என்னமோ செய்யம்மா? எனக்கென்னவோ பயமாக இருக்கிறது.

மீனாட்சி : ஒண்ணும் பயமே வேண்டாம்—நான் பக்குவமாக அவரிடம் பேசிப் பார்க்கிறேன். டாக்டரும் இப்போ கொஞ்சம் பிரியமாகத்தான் இருக்கிறார்.

சரோஜா : அம்மா, இன்னும் கொஞ்ச நாளைக்குப் பிறகு வேண்டுமானால்...

மீனாட்சி : நீ சும்மா இரு சரோஜா. டாக்டரிடத்திலே நான் இன்றைக்கு வீட்டுக்குப் போகிற விஷயம் பேசவேணும். அதே சமயத்திலே மெல்ல இதைப்பற்றியும் சொல்லுகிறேன். நீ குறுக்கே நிற்கப்படாது.

[சரோஜா ஒன்றும் தீர்மானம் செய்ய முடியாத நிலையில் மனப்போராட்டத்தோடு நிற்கிறாள். மீனாட்சி அவள் நிலையை நன்கு கவனித்து விட்டு மேலும் பேசுகிறாள்.]

சரோஜா, வெய்யிலிலே உலர்த்தப்போட்டிருந்த சேலையெல்லாம் காய்ந்திருக்கும். நீ போய் எடுத்துக் கொண்டு வா. டாக்டர் வரும் நேரமும் ஆகிவிட்டது.

[சரோஜா தயக்கத்தோடு வெளியே போகிறாள்.]

திரை

## காட்சி இரண்டு

[கேசவன் தனது அறையில் தனியாக அமர்ந்திருக்கிறான். முகத்தில் கோபக்குறி இலேசாகத் தோன்றியது. சரோஜா உள்ளே நுழைகிறாள். காலை மணி பத்திருக்கும்.]

சரோஜா : டாக்டர், நீங்கள் என்னை அழைத்ததாக ராமன் சொன்னான்.

கேசவன் : சரோஜா உன்னிடம் ஒரு விஷயம் தனியாகப் பேசவேணுமென்று கூப்பிட்டேன்.

சரோஜா (சந்தோஷத்தோடு, தயக்கத்துடன்) என்ன டாக்டர்...?

கேசவன் : உன் தாயார் என்னிடம் பேசிய விஷயமெல்லாம் உனக்குத் தெரியுமா?

சரோஜா : நான் அம்மாவை உங்களிடம் பேச வேண்டாமென்று தடுத்தேன். ஆனால், அவர்கள் கேட்கவில்லை...?

கேசவன் (கடுமையாக) : பழியை அவர்கள்மேல் சுமத்த வேண்டாம். நீ கொஞ்சங்கூடச் சம்மதிக்கவில்லையா?

சரோஜா (இரங்கிய குரலில்) : டாக்டர் நான் வந்து தடுக்க முயன்றது வாஸ்தவம். ஆனால், உள்ளுக்குள்ளே

ருேம்மா உங்களிடம் பேசவேண்டுமென்பதிலே ஆசை
த்தூக்கத்தான் செய்தது. அதை நான் [illegible]யென்று
து. துக்கமுடியாது.

ன். கேசவன் : அப்போ இங்கே வேலை செய்ய
னக்குத் தகுதியில்லை—இன்றே போய்விடு.

சரோஜா : இந்தமாதிரி கோபிப்பீர்கள் என்று
ான் அம்மாளிடம் பரிந்து பரிந்து சொன்னேன். ஆனால்
வர்களுக்கென்னவோ ஒரே நம்பிக்கை. அதனால்தான்
ானும் கடைசியாகப் பேசாமலிருந்துவிட்டேன். என்
யார் வீணுகக் கவலைப்பட்டு மறுபடியும் இந்தயக்
ாளாறு வரக்கூடாதே என்றுதான் எனக்குக் கவலை
ாக இருந்தது. அதை நினைத்தே நான் அம்மாளை அதிக
ாகத் தடுக்கவில்லை.

கேசவன் : இருந்தாலும் நீ செய்தது தப்பு. என்
துடைய தீர்மானத்தைக் குலைப்பதற்கு நீ தந்திரமாகச்
ழ்ச்சி செய்திருக்கிருய்.

சரோஜா : இதில் ஒன்றும் சூழ்ச்சியோ தந்திரமோ
ல்லை, டாக்டர். ஏதோ பெண்ணுள்ளத்திலே ஏற்பட்ட
லந்தான் காரணம். அதற்கும் தகுந்த காரணம்
ல்லாமலில்லை. அந்த ராஜூ முன்னைக் காட்டிலும்
ப்போது சந்தோஷமாக இருக்கிறர். முதல் மனைவி
ருந்தபோதுகூட அவர் இவ்வளவு சந்தோஷமாக
ருந்ததில்லை.

கேசவன் : அது உனக்கெப்படித் தெரியும்?

சரோஜா : மனைவி இறந்துபோய் மூன்று வருட
ாசத்திலேயே வேறு கலியாணம் செய்துகொண்டதால்
வரைப்பற்றிக் கொஞ்சம் விசாரித்துப் பார்த்தேன்.
க்கத்து வீட்டுக்காரரெல்லாம் இப்போ அவர் முன்னைக்

காட்டிலும் சந்தோஷமாக இருப்பதாகத்தான் சொல்லு கிறார்கள். நேரிலும் நான் அதைக் கண்டிருக்கிறேன்.

கேசவன் : அவர் மனதிலே எத்தனை வேதனை இருக்குமோ—அது அவர்களுக்கு எப்படித் தெரியப் போகிறது? உனக்குத்தான் எப்படித் தெரிய முடியும்?

சரோஜா : நடவடிக்கையிலிருந்து கொஞ்சமாவது உண்மை தெரியாமலா போகும்?

கேசவன் . அவர் தமது முதல் மனைவியை இழந்த துக்கத்தை மறப்பதற்காகவே இப்படி வெளித்தோற்றத் திற்குக் குதூகலமாக நடந்துகொண்டு இருக்கலாம். துக்கத்தை மறக்க அதுவும் ஒரு வழிதானே?

சரோஜா : இருந்தாலும் எனக்கு அது இயற்கை யாகத் தோன்றவில்லை. துக்கமிருந்தால் அது ஒரு சமயத் தில் இல்லாவிட்டாலும் மற்றொரு சமயத்திலே வெளி யாகாமல் போகாது.

கேசவன் : சரோஜா, அதைப்பற்றி ஆராய்ச்சி செய்ய நான் உன்னைக் கூப்பிடவில்லை.

சரோஜா (கொஞ்சம் தயங்கி நின்று) : டாக்டர், என் தாயாரைத் தங்களிடம் பேசவிட்டது தவறென்று எனக்கு இப்பொழுது தெளிவாகப் படுகிறது. என்னை மன்னித்துவிடுங்கள்; இனிமேல் இப்படி எதுவும் நேராது.

கேசவன் : எனக்கு இனிமேல் நீ இங்கு வேலை செய்வது இஷ்டமில்லை.

சரோஜா : அப்படிச் சொல்லாதீர்கள் டாக்டர். என் மனம் ஒடிந்துபோவதோடு என் தாயாரின் நிலைமை

யும் மறுபடியும் கெட்டுப்போகும். இந்த ஒரு பிழையை மன்னித்துவிடுங்கள், மறுபடியும் இப்படி ஏற்படாது.

கேசவன் (யோசனை செய்து): ம்...பார்க்கலாம். உன் தாயாரின் நிலைமையை எண்ணி இந்த முறை விட்டுக்கொடுக்கிறேன். ஆனால், இன்றிலிருந்து நீ நமது பிரசவவிடுதிக்குப் போய் அங்கிருந்தே வேலை செய்ய வேணும். இங்கே வேண்டாம்.

சரோஜா: பிரசவ விடுதியிலா?...அங்கே வேலை செய்ய நான் பயிற்சி பெறவில்லையே?

கேசவன்: இங்கே வரும்போது மட்டும் உனக்கென்ன பயிற்சி இருந்தது? அதைப்போல அங்கேயும் பழகிக்கொள்ளலாம். அங்கே போகச் சம்மதமானால் இருக்கலாம்...இல்லாவிட்டால்...

சரோஜா: சரி டாக்டர், உங்கள் உத்திரவுப்படியே அங்கு வேலை செய்கிறேன். ஆனால், ஒரு விஷயம் நான் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன்.

கேசவன்: என்ன விஷயம்?

சரோஜா: அங்கே வேலை செய்யச் சொல்லுவதன் காரணம் என்ன?

கேசவன்: உன்னை நான் பார்க்கும் சந்தர்ப்பம் குறையும்; அதுதான் காரணம்.

சரோஜா: ஓ...அதுதான் காரணமா? அப்படியானால் சரி டாக்டர், எனக்கும் சம்மதம்.

கேசவன்: அம்மாளை வீட்டுக்கு அனுப்பிவிட்டு நீயும் இன்றைக்கே பிரசவ விடுதிக்குச் செல்லலாம்.

சரோஜா : அப்படியே செய்கிறேன் டாக்டர்.

[புறப்பட்டுப் போகிருள். இருவருடைய உள்ளத்திலும் பெரிய போராட்டம் ஏற்படுகிறது.]

திரை

## காட்சி மூன்று

[பிரசவ விடுதியிலே ஓர் அறை. குழந்தையொன்று தொட்டிலிலே தூங்கிக்கொண்டிருப்பதற்கு அறிகுறியாக ஒரு பக்கத்தில் தொட்டில் தெரிகிறது. நாகவல்லியும் சரோஜாவும் பேசிக்கொண்டிருக்கிருர்கள். நாகவல்லிக்கு வயது இருபது இருக்கலாம். கபடமறியாத பெண்ணென்பதை அவள் பேச்சுக் காண்பிக்கிறது. காலை பத்து மணி.]

நாகவல்லி : அக்கா நீங்கள் எனக்குத் தெய்வம் போல. உங்களை ஒருநாளும் நான் மறக்கமாட்டேன்.

சரோஜா : நான் உனக்கு அப்படி என்ன உதவி செய்துவிட்டேன்? இந்த ஏற்பாடுகளெல்லாம் டாக்டர் தான் செய்கிருர். அவரைத்தான் நீ வாழ்த்தவேணும்.

நாகவல்லி : இருந்தாலும் நீங்கள் இல்லாவிட்டால் நான் என்ன கஷ்டப்பட்டிருப்பேனே? முதல் பிரசவம் ரொம்பக் கஷ்டமா இருக்குமென்று எல்லோரும் சொன்ஞர்கள். அப்படித்தான் ஆய்விட்டது. உங்கள் உதவியால்தான் நான் தப்பிப் பிழைத்தேன். குழந்தையும் சௌக்கியமாகவே இருக்கிறது.

சரோஜா : குழந்தை தூங்குகிருனு?

நாகவல்லி : இப்பத்தான் தூங்கினன். அவன் மட்டும் பெண்ணுய்ப் பிறந்திருந்தால் உங்கள் பெயரைத் தான் அதுக்கு வைத்திருப்பேன்.

சரோஜா (புன்னகையுடன்): குழந்தையை வீட்டுக்கு எடுத்துப் போன பிறகு ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். ஏதாவது தொந்தரவு ஏற்பட்டால் உடனே என்னிடம் வா.

நாகவல்லி: ஆகட்டும் அக்கா. நீங்கள் சொல்லிக் கொடுத்த மாதிரியே குழந்தைக்கு எல்லாம் செய்கிறேன். நீங்களும் குழந்தையைப் பார்க்க எப்பவாவது எங்கள் வீட்டுக்கு வரவேணும்.

சரோஜா: என்னாலே வெளியே அடிக்கடி போக முடியாது. இங்கே வேலை அதிகமாக இருக்கும்.

நாகவல்லி: ஆமாம் அக்கா. நானும் பார்த்துக் கொண்டுதானிருக்கிறேன். எப்போ பார்த்தாலும் ஏதாவது பண்ணிக்கொண்டே இருக்கிறீர்கள். உங்களுக்குச் சலிப்பே இருக்காதோ என்னமோ? இருந்தாலும் ஒரு நாளைக்காவது எங்கள் வீட்டுக்கு நீங்கள் வரவேணும். அவரும் ரொம்ப சந்தோஷப்படுவார்.

சரோஜா: ராஜு இப்போ உன்னை அழைத்துப் போவதற்கு வருவாரா?

நாகவல்லி: ஆமாம், இன்னும் ஒருமணி நேரத்திலே வந்திடுவார்...(கொஞ்சம் தயங்கி) அக்கா, நான் வீட்டுக்குப் போகிறதுக்கு முன்னாலே உங்களிடத்திலே ஒரு விஷயம் கேட்கலாமென்று ரொம்ப நாளாக ஆசை— கோபிக்க மாட்டீங்களே?

சரோஜா: கோபமென்ன நாகவல்லி? தாராளமாகக் கேள்.

நாகவல்லி (தயங்கி): நீங்கள் ஏன்......இன்னும் கலியாணம் பண்ணிக்கவில்லை?

சரோஜா : இதைத்தானா கேட்க வந்தாய்? எனக்கெதற்குக் கலியாணம்? நான் கலியாணமே செய்துகொள்ளப் போகிறதில்லை.

நாகவல்லி : அக்கா, ஊரிலே என்னென்னமோ சொல்லிக்கிறாங்களே? இந்த டாக்டரையே கலியாணம் பண்ணிக்கிறதா இருந்திங்களாமே?

சரோஜா (சற்று யோசனை செய்தபிறகு) : அதெல்லாம் போன ஜன்மத்துக் கதை, நாகவல்லி—அதையெல்லாம் நம்பவேண்டாம்.

நாகவல்லி : அக்கா, அப்படிச் சொல்லி மறைக்காதிங்கோ—கலியாணம் திடீரென்று ஏனோ நின்று போச்சாம்—அதனாலேதான் உங்கள் அம்மாவுக்கும் மயக்கம் போட்டு உயிருக்கே ஆபத்தாகப் போய் விட்டுதாம்.

சரோஜா : இதெல்லாம் யார் சொன்னது உனக்கு?

நாகவல்லி : என்னமோ அக்கா, நாலு பேர் சொன்னதைத்தான் உங்களிடத்திலே கேட்கிறேன். நான் சொன்னது தப்பாக இருந்தால் என்மேல் கோபம் கொள்ளப்படாது. இன்னும் உங்களைப்பற்றி என்னென்னமோ அவதூருகப் பேசிக்கிருர்கள்.

சரோஜா : நாகவல்லி, நீ அவர்கள் சொல்லுவதையெல்லாம் நம்புகிருயா?

நாகவல்லி : இல்லையக்கா, இருந்தாலும் உங்களிடத்திலே சொல்லிவைக்கிறது நல்லதுதானே?

சரோஜா : அது சரிதான்.

நாகவல்லி : அக்கா, கலியாணம் ஏன் நின்னு போச்சு?

சரோஜா : நாகவல்லி, நடந்த விஷயமெல்லாம் உன்னிடத்திலே விவரமாகச் சொல்லுகிறேன். அதற்கு முன்னாலே உன்னை நானொன்று கேட்கிறேன். அதற்கு ஒளிக்காமல் பதில் சொல்லுவாயா?

நாகவல்லி : அக்கா, உங்களிடத்திலே நான் எதையும் ஒளிக்கவே மாட்டேன், சொல்லுங்கள்.

சரோஜா : இப்போ உனக்குக் கலியாணம் ஆகி எத்தனை மாதமாயிற்று?

நாகவல்லி (நாணத்தோடு) : எட்டு மாதந்தான் ஆச்சு, அக்கா, நீங்கள் கேட்கிறது எனக்குப் புரிஞ்சு போச்சு.

சரோஜா : அதனாலேதான் சந்தேகமாகக் கேட்டேன். பரவாயில்லை — முன்னாலேயே — உங்களுக்குள்ளேயே......

நாகவல்லி : அவரை எனக்கு ரொம்ப நாளாகத் தெரியும். ரெண்டு பேருக்கும் மனசு பிடிச்சுது......

சரோஜா : சரி, நாகவல்லி. அதைப்பற்றி நான் குற்றமொன்றும் சொல்லவில்லை. தெரிந்துகொள்ள வேணுமென்றுதான் கேட்டேன்.

நாகவல்லி : நீங்கள் கேட்டதுக்கு நான் ஒளிக்காமல் சொல்லிவிட்டேன். இப்போ நீங்கள் சொல்ல வேணும்.

சரோஜா : ஆகட்டும் நாகவல்லி. விவரமாகச் சொல்லுகிறேன். வா, என்னுடைய அறைக்குப் போவோம். அங்கே கொஞ்சம் வேலையிருக்கிறது. அதைச் செய்துகொண்டே பேசுவோம்.

நாகவல்லி : சரி அக்கா, அங்கேயே போவோம்.

சரோஜா: குழந்தை அழமாட்டானே?

நாகவல்லி: இப்பொழுதுதான் தூங்கினான். இன்னும் எழுந்திருக்க நேரமாகும். வாருங்கள் போகலாம்.

[நாகவல்லி தொட்டிலருகில் சென்று பார்த்துவிட்டு வருகிறாள். இருவரும் புறப்படுகிறார்கள்.]

திரை

## காட்சி நான்கு

[ராஜுவின் வீட்டிலே ஓர் அறை. ராஜுவும் நாகவல்லியும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். குழந்தை தூங்கிக்கொண்டிருக்கிறது என்பதற்கு அறிகுறியாக ஒரு கோடியிலே தொட்டில் இருக்கிறது. உச்சிவேளை.]

நாகவல்லி: அந்த சரோஜா அக்கா இருக்கிறார்களே என்னை ரொம்பவும் நல்லாக் கவனித்தார்கள். நம்ம குழந்தையிடத்திலே அவர்களுக்கு உயிர்.

ராஜு: அப்படியா? அந்தம்மா ரொம்ப நல்லவுங்கன்னு எல்லோரும் பேசிக்கிறார்கள்.

நாக: டாக்டரும் நல்லவர்தான். ஓய்வொழிச்சல் இல்லாமல் வந்தவர்களையெல்லாம் கவனித்துக்கொண்டே இருக்கிறார். ஆஸ்பத்திரியிலே சதா வைத்தியம் பண்ணிக்கொண்டே இருக்கிறார். அதற்கு மத்தியிலே பிரசவ விடுதிக்கும் போய் அங்கேயும் எல்லாம் கவனிக்கிறார். இத்தனைக்கும் பணத்தைப் பற்றி நினைக்கிறதே இல்லை. முக்கால் வாசிக்கும் மேலே எல்லாம் தரும வைத்தியம்தான்.

ராஜு: நம்மகிட்டக்கூட பணம் வாங்கவே மாட்டேனென்று சொல்லிவிட்டாரே? நானும் எவ்

வளவோ வற்புறுத்தியும் அவர் வாங்கிக் கொள்ள வில்லை.

நாகவல்லி : அதற்குக் காரணம் உங்களுக்குத் தெரியாதா? அது ஒரு பெரிய கதை. எல்லாம் சரோஜா அக்கா இன்றைக்குத்தான் நான் இங்கே வருவதுக்கு முன்னாலே சொன்னார்கள்.

ராஜு : என்ன அது? அந்த அம்மாளைப்பற்றி என்னமோ காதிலே எனக்கும் விழுந்தது.

நாகவல்லி : அதெல்லாம் சுத்தப் பொய். நானும் அப்படித்தான் கேள்விப்பட்டேன். இன்றைக்குத்தான் உண்மை தெரிந்தது. அந்த அக்காளை நினைத்தால் எனக்கு நெஞ்சு வெடிச்சுப் போறமாதிரி இருக்கிறது. எல்லாம் உங்களாலே வந்ததுதான்.

ராஜு ; என்னாலேயா? அதென்ன அப்படி? எனக்கு அந்த அம்மாளையே முன்னாலே தெரியாதே?

நாகவல்லி : அந்த டாக்டர் சரோஜா அக்காளைத் தான் கல்யாணம் பண்ணிக்கிறதாக இருந்தாராம். ஒரு வருஷத்துக்கு முந்தி நீங்கள் அவசரமாக அவர்களை வீட்டுக்குக் கூப்பிட்டீங்களே அன்றைக்குத்தான் கலி யாணம் பண்ணிக்கிறதாகவே முடிவு செய்தார்களாம்.

ராஜு (யோசனையோடு) : ..........ஊம்.......... அன் றைக்கா?

நாகவல்லி : ஆமாம். சரோஜா அக்காளைப் பூங்கா விலே சந்தித்துப் பேசிவிட்டு டாக்டர் நேராக இங்கே வந்தாராம்.

ராஜு (ஊன்றிக் கேட்டுவிட்டு) : அப்படியா?.... அவர் வருவதற்கு முன்னாலேயே இவள் இறந்து

மீனாட்சி : நாகவல்லியைப்பற்றி சரோஜா அடிக்கடி என்னிடத்திலே பேசிக்கொண்டிருப்பாள்.

ராஜு : உங்கள் மகளைப்பற்றியும் நாகவல்லி என்னிடத்திலே பேசாத நாளே கிடையாது. சரோஜா ரொம்பத் தங்கமானவங்க.

மீனாட்சி (பெருமூச்சு விட்டு) : இருந்து என்னப்பா செய்கிறது? சரோஜா ரொம்ப நல்லவள்தான். ஆனால் அவள் வாழ்க்கையை நினைத்தால் எனக்கு நெஞ்சு வெடித்துப் போகிற மாதிரி இருக்கிறது.

ராஜு : அந்த டாக்டர் இப்படிக் கல் மனசாக இருக்கப்படாது. என்னை நினைச்சி அவர் எதுக்கு இப்படி விரதம் கொண்டிருக்கிறார்? எனக்கு இப்போ ஒண்ணும் குறைச்சலே இல்லையே?

மீனாட்சி : ராஜு, உங்களுக்கு அந்த விஷயமெல்லாம் தெரியுமா?

ராஜு : நாகவல்லி எல்லாம் சொன்னாள். அதைக் கேட்டதிலிருந்து எனக்கும் மனசுக்குச் சரியாக இல்லிங்க.

மீனாட்சி : டாக்டர் மனசை மாற்றவேண்டுமானால் அது உங்களால்தான் முடியும்.

ராஜு : என்னாலேயா?

மீனாட்சி : ஆமாம் நீங்கள் இப்போ சந்தோஷமாக இருக்கிற விஷயத்தைப்பற்றி நன்றாக அவருக்கு எடுத்துச் சொன்னால் அவர் நம்புவார். அதை நாங்கள் சொன்னால் அத்தனை நம்பிக்கை வராது.

ராஜு : நான் டாக்டரிடம் சொல்லுவதற்கு இந்த நிமிஷமே தயார்.

மீனாட்சி: நீங்கள்தான் சொல்லி அவரை எப்படி யாவது மாற்றவேணும். சரோஜாவுக்காக இந்த உப காரத்தை நீங்கள் செய்யக் கூடாதா?

ராஜு: நிச்சயமாகச் செய்யறேன். இன்னும் என்னாலே வேறு என்ன ஆகுமானாலும் செய்யறேன்.

மீனாட்சி: சரோஜாவுக்கு இந்த விஷயம் தெரியக் கூடாது.

ராஜு: ஏன்?

மீனாட்சி: தெரிந்தால் அவள் சம்மதிக்கமாட்டாள். டாக்டரிடம் போய் இதைப் பற்றிப் பேசவே கூடாது என்று சொல்லுவாள்.

ராஜு: அப்படியா? சரி.

மீனாட்சி: நாகவல்லியிடத்தில் கூட சொல்லப் கூடாது. அவளிடத்திலே சொன்னால் அவள் வாய் சும்மா இருக்காது; சரோஜாவிடம் உடனே சொல்லி விடுவாள்.

ராஜு: நான் யாரிடத்திலும் சொல்லமாட்டே னம்மா. காரியம் ஆனால் போதும். இந்தக் காரியத்திலே ஜெயித்துவிட்டால் எனக்கும் மனசு நிம்மதியாப் போகும். அப்புறம் எனக்கும் கவலையே இருக்காது.

மீனாட்சி: உங்களாலேதான் இது ஆகும்.

ராஜு: இன்றைக்கே டாக்டரிடம் போகிறேன். நீங்கள் கவலைப்படாதிர்கள்.

மீனாட்சி: எனக்கு இதே கவலைதானப்பா. சரோஜாவும் ஒரே பிடிவாதமாக இருக்கிறாள்.

ராஜு: உங்களுக்கு இனிமேல் கவலை வேண்டாம். நான் இப்பவே டாக்டரைப் பார்த்துப் பக்குவமாகப்

பேசப் போகிறேன். நீங்கள் என்னை வரச் சொன்னது எனக்கே நல்லதாச்சு. நான் போய்ட்டு வர்ரனம்மா.

[புறப்பட்டுப் போகிறான்.]

திரை

## காட்சி ஆறு

[டாக்டர் கேசவன் மாளிகையில் ஓர் அறை கேசவன் ஒரு நாற்காலியில் அமர்ந்திருக்கிறான். ராஜு வணக்கம் தெரிவித்துக் கொண்டே உள்ளே நுழைகிறான். மாலை நேரம்.]

ராஜு: டாக்டர் ஸார், உங்களிடம் ஒரு விஷயம் பேசலாமென்று வந்தேன்.

கேசவன்: வாருங்கள் ராஜு. இப்படி வந்து உட்காருங்கள்—குழந்தை சௌக்கியமாக இருக்கிறதா?

ராஜு: குழந்தையும் தாயும் சௌக்கியமாக இருக்கிறார்கள். நீங்கள் அவர்களுக்குப் பண்ணின உபகாரத்துக்கு உங்களை என்றைக்கும் மறக்க மாட்டோம், டாக்டர்.

கேசவன்: அதிருக்கட்டும் ராஜு, இப்போ என்ன விஷயமாக வந்தீர்கள்?

ராஜு: வாழ்க்கையிலே எனக்கு இப்போ ஒரு கவலையும் இல்லீங்க. சௌக்கியமா சந்தோஷமா இருக்கிறேன். என் மனைவியும் அப்படித்தான். ஒரு குறையும் இல்லீங்க.

கேசவன்: அப்படியா? அதைக் கேட்க எனக்கும் சந்தோஷந்தான்.

ராஜு: அந்த அம்மா சரோஜா இருக்காங்களே, அவுங்களிடத்திலே என் பெண்ஜாதி நாகவல்லிக்கு உயிருங்க. அத்தனை பிரியம். அந்த அம்மா அத்தனை நல்லவங்க.

கேசவன்: ம்........இப்பொழுது நீங்கள் வந்த காரியத்தைச் சொல்லுங்கள்.

ராஜு: டாக்டர் ஸார், நான் என்னவோ சொல்றதாக நினைக்கப்படாது...நான் சொல்றதைக் கொஞ்சம் சாவகாசமாகக் கேட்கவேணும்.

கேசவன்: சொல்லுங்கள், இத்தனை பீடிகையெல்லாம் எதற்கு?

ராஜு (தயங்கி): நீங்கள் அந்த அம்மா சரோஜாவைக் கல்யாணம் பண்ணிக்கவேணும்.

கேசவன்: என்ன, என்ன சொன்னீர்கள்?

ராஜு: ஆமாம் டாக்டர், நீங்கள் கட்டாயம் பண்ணிக்கொள்ளத்தான் வேணும். என்னமோ நான் அன்றைக்குக் கோபமாகப் பேசிவிட்டேன். அதனால்தான் நீங்கள் கல்யாணமே பண்ணிக்கிறதில்லேன்னு சொல்லிவிட்டீங்களாமே.........?

கேசவன்: யார் உங்களுக்கு அப்படிச் சொன்னது?

ராஜு: எல்லாம் எனக்குத் தெரியும் டாக்டர். நீங்கள் நினைக்கிறமாதிரி நான் இப்போ மனசிலே கவலைப் பட்டுக்கொண்டு இருக்கவில்லை. அதனாலே நீங்கள் இப்படி விரதம் எடுக்க வேண்டிய அவசியமே இல்லை.

கேசவன்: ராஜு, நீங்கள் பேசுகிறது எனக்குப் புரியவில்லை. என்னுடைய விரதத்தைப் பற்றி உங்களுக்கு எப்படித் தெரியும்?

ராஜு: என் மனைவி நாகவல்லியிடம் சரோஜா அம்மாதான் சொன்னார்களாம். அப்படிச் சொன்னதுக்காக நீங்கள் கோபிக்கப்படாது.

கேசவன்: நீங்கள் என்னுடைய சொந்த விஷயத்திலே இவ்வளவு அக்கறை கொண்டதற்குச் சந்தோஷம். ஆனால், அது அவசியமில்லை. இப்போ வேறு ஏதாவது விஷயம் இருந்தால் பேசலாம்.

ராஜு: டாக்டர், நான் உங்களை ரொம்பவேண்டிக் கேட்கிறேன். என்னமோ நான் தெரியாத்தனமாக அன்றைக்குப் பேசினதை நினைத்து நீங்கள் உங்கள் வாழ்க்கையையே இப்படிக் கழிக்கப்படாது. அந்த அம்மாளை நினைத்தாவது......

கேசவன் (கொஞ்சம் கடுமையாக): நான் உங்களுடைய யோசனையைக் கேட்க வருகிறபோது நீங்கள் சொல்லலாம். என்னுடைய வாழ்க்கையை எப்படி நடத்துவதென்று எனக்குத் தெரியும். அதற்கு உங்களுடைய ஆலோசனை வேண்டியதில்லை.

ராஜு: ஸார், நான் சொல்லுவதற்காக என்மீது ஆத்திரப்படக்கூடாது. நான் உங்கள் விஷயத்திலே பெரிய தப்புச் செய்துவிட்டேன். அதிலிருந்து இப்படி நீங்கள் கல்யாணமே பண்ணிக்கப்படாதென்று தீர்மானம் செய்வீர்களென்று நான் நினைக்கவே இல்லை. நீங்கள் இல்லாவிட்டால் நாகவல்லி குழந்தை பிரசவத்தின் போதே இறந்து போயிருப்பாள். அவள் உயிரை எனக்கு நீங்கள்தான் கொடுத்தீர்கள். அதனாலே நீங்கள் இப்படி வாழ்க்கையை வெறுத்துவிட்டு இருந்தால் என் மனசு கேட்கவில்லை. நீங்கள் அந்த சரோஜா அம்மாளைக் கட்டாயம் கலியாணம் பண்ணிக்க வேணும்.

கேசவன் (கடுமையாக): ராஜு, மறுபடியும் இந்த விஷயத்தைப் பற்றி என்னிடம் பேசாதீர்கள். நீங்கள்

அதிகமாக வற்புறுத்திப் பேசுவதைப் பார்த்தால் இதில் ஏதோ எல்லோரும் கலந்து திட்டம் போட்டிருப்பது போலத் தெரிகிறது.

ராஜு (சட்டென்று) : இல்லை, இல்லை. அப்படி நீங்கள் நினைக்கவே படாது.

கேசவன் : அப்படி இல்லையென்றால் உங்களுக் கென்ன இத்தனை அக்கறை? இது என்னுடைய சொந்த விஷயம்......நீங்கள் போய் வரலாம்.

ராஜு (இரங்கிய குரலில்): ஸார், கொஞ்சம் நிதானமாகக் கேட்கவேணும்...என் மனசிலே உள்ளதைச் சொல்லிவிடுகிறேன்.

கேசவன் (மேலும் கோபமாக) : மறுபடியும் இந்தப் பேச்சையே எடுக்கக்கூடாது. உங்கள் மனசைத் தெரிந்து கொள்ள எனக்கு இப்பொழுது ஆசையில்லை... புறப்படுங்கள்.

[ராஜு தயங்கித் தயங்கிச் செல்லுகிறான்.]

ந்ர

## காட்சி ஏழு

[பிரசவ ஆஸ்பத்திரியின் அலுவல்களைக் கவனிப்பதற்காக டாக்டர் கேசவன் வரும் பொழுது அவனுடைய உபயோகத்திற்கென ஒதுக்கப் பட்டிருக்கும் ஓர் தனி அறை. கேசவன் அங்கு ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்தவன் இருக்கை கொள்ளாமல் எழுந்து நடமாடிக் கொண்டிருக் கிறான். சரோஜா உள்ளே நுழைகிறாள். மாலை மயங்கும் நேரம்.]

சரோஜா : டாக்டர், எதற்கு என்னை அவசரமாக அழைத்தீர்கள் ?

கேசவன் : சரோஜா, நீ அந்த நாகவல்லியிடம் என்ன பேசினாய்?

சரோஜா (திடுக்கிட்டு) ; ஏன் அதைப் பற்றி என்ன இப்போ? நான் பல தடவை அவளோடு என்னென்னவோ பேசியிருக்கிறேன். எந்த விஷயத்தைப் பற்றிக் கேட்கிறீர்கள்?

கேசவன் : நான் கலியாணம் பண்ணிக்காததின் காரணம் எல்லாம் அவளுக்கு எப்படித் தெரிந்தது?

சரோஜா : ஓ அதுவா? ஏதோ பேச்சு வாக்கில் அவளிடம் கூறும்படி ஏற்பட்டது.

கேசவன் (கடுமையாக) : அதைப் பற்றி வெளியே பேசக்கூடாதென்று நான் சொன்னதுண்டா இல்லையா?

சரோஜா : ஆமாம் சொல்லியிருக்கிறீர்கள்.

கேசவன் : நீ அதை மீறி நடந்திருக்கிறாய். இனிமேல் நீ இங்கே வேலை செய்ய முடியாது.

சரோஜா : நான் சொன்னதிலே தவறொன்றும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லையே?

கேசவன் : தவறில்லையா? ஏன் தவறில்லை? இந்த விஷயத்தைப் பறையடிக்க உன்னை நான் இங்கு வைத்திருக்கவில்லை. நீ இன்றைக்கே போய் விடலாம்.

சரோஜா : கலியாணம் என்ற பேச்சை மறுபடியும் எந்த வகையிலும் எடுக்கக்கூடாது என்று நீங்கள் கூறினீர்கள். நான் அந்த நிபந்தனையை மீறவே இல்லை. இனிமேலும் மீற மாட்டேன்.

கேசவன் : பின் எதற்காக நாகவல்லியிடம் பழைய விஷயத்தைப் பற்றிப் பேசினாய்?

சரோஜா : அவள் இந்தக் கலியாணத்தை மீண்டும் நடக்கும்படி செய்துவிடுவாளென்று நான் அந்த விஷயத்தைச் சொல்லவில்லை. அவளால் அது ஆகுமென்று நினைக்க நான் அத்தனை முட்டாள் அல்ல.

கேசவன் : பிறகு எதற்கு அவளிடம் பேசினாய்?

சரோஜா : என்னைப் பற்றி ஊரிலே என்னென்னவோ பேசிக் கொள்கிறார்கள். நாகவல்லியாவது உண்மையைத் தெரிந்துகொள்ளட்டும் என்ற ஆசையால் தான் சொன்னேன்.

கேசவன் : ஊரிலே என்ன பேசுகிறார்கள்?

சரோஜா : என்ன பேசுவார்கள்? உங்களுக்கும் எனக்கும் இல்லாத சம்பந்தமெல்லாம் இருப்பதாகப் பேசுகிறார்கள். நான் இங்கே வேலை செய்து கொண்டிருப்பதற்கு அவர்கள் சொல்லுகிற காரணங்கள்தான் அவையெல்லாம்.

கேசவன் : ஊரார் என்னவாவது பேசினால் அதைப் பற்றி நீ ஏன் கவனிக்கிறாய்? இந்தமாதிரி வதந்தியையெல்லாம் எதிர்த்து நிற்கத் தைரியமில்லாமல் நீ இங்கு வேலை செய்ய வந்திருக்கக்கூடாது.

சரோஜா : எனக்குத் தைரியம் இல்லாமலில்லை— ஊர்ப்பேச்சுக்குப் பயந்திருந்தால் நான் இத்தனை நாள் இங்கிருந்திருக்க முடியாது.

கேசவன் : பிறகு எதற்காக நாகவல்லியிடம் அதைச் சொன்னாய்?

சரோஜா : என்மேல் அன்பாக இருக்கிற ஒன்றிரண்டு பேராவது உண்மையைத் தெரிந்து என்னைப் பற்றி நல்லெண்ணம் கொண்டிருக்க வேண்டாமா? நான்

மாசற்றவள் என்று அவர்களுக்காவது தெரிய வேண்டாமா, டாக்டர்? இந்த ஆசைகூட எனக்குக் கூடாதா?

கேசவன் : என்ன இருந்தாலும் நீ பேசியது எனக்குப் பிடிக்கவில்லை.

சரோஜா : என்னுடைய நல்ல பெயரைக் காப்பாற்றிக்கொள்ள இந்தச் சுதந்திரமாவது எனக்குக் கொடுப்பீர்களென்று நான் நினைத்தேன். இதிலே நான் என்னைப்பற்றி மட்டும் நினைக்கவில்லை, டாக்டர். உங்களுடைய நல்ல பெயரைக் காப்பாற்ற வேண்டுமென்பது தான் என்னுடைய முக்கியமான ஆவல். மக்களுக்குச் சேவை செய்வதையே வாழ்க்கையாகக் கொண்டுவிட்ட உங்களைப் பற்றி ஊரார் தவறாகப் பேசுவது எனக்குப் பொறுக்கவில்லை.

கேசவன் : என்னைப்பற்றிப் பல வதந்திகள் ஊரிலே கிளம்புகிறதென்றால் அதற்கு மூல காரணம் யாரென்று உனக்குத் தோன்றவில்லையா?

சரோஜா (விசனங்கலந்த குரலில்) : எனக்கு நன்றாகத் தெரிகிறது, டாக்டர். அதற்கு நான்தான் காரணம். நான் இந்த இடத்தில் வேலை செய்துகொண்டிருப்பதால்தான் ஊரார் அப்படியெல்லாம் பேசுகிறார்கள். ஆனால்......

கேசவன் (கோபமாக) : ஆனால்...ஆனால்... என்ன?

சரோஜா ; நான் இந்த இடத்தை விட்டே வேறெங்காவது போய்விடலாம். அப்படிப் போய்விட்டால் பிறகு உங்களுக்குப் பழிச் சொல் வராது. இதை நான் நன்றாக உணர்கிறேன். ஆனால் என் தாயாரின் நிலைமை என்ன

வாகுமோ? நானிங்கிருந்து போவதானால் அம்மாவுக்குள்ள ஒரு நம்பிக்கையும் குலைந்து போகும். அவனுடைய வாழ்க்கை அப்படியே அணைந்துபோகும்.

[சரோஜாவின் கண்களில் கண்ணீர் ததும்புகிறது.]

கேசவன் (சற்று யோசனை செய்துவிட்டு): அம்மாவுடைய ஆசை நிறைவேற வேண்டுமென்றுதான் இந்தச் சூழ்ச்சி செய்தாயோ?

சரோஜா (கவலையோடு): சூழ்ச்சியா? நான் என்ன சூழ்ச்சி செய்தேன்?

கேசவன்: நீ ஏவிவிடாமல் அந்த ராஜு உனக்காகப் பரிந்து பேசிக்கொண்டு இங்கு எப்படி வருவான்?

சரோஜா: ராஜுவா? அவர் இங்கு வந்தாரா?

கேசவன்: சரோஜா, எதற்காக விஷயத்தை மறைக்க முயல்கிறாய்?

சரோஜா (சற்றுக் கோபமாக): டாக்டர், ராஜு இங்கு வந்த விஷயம் எனக்குத் தெரியாது. அவரோடு நான் சூழ்ச்சியொன்றும் செய்ததும் கிடையாது. உண்மையை மறைத்துப் பேசி நான் என்றுமே அறியேன். இதையும் நீங்கள் நம்புவதில்லையென்றால் நான் இந்த இடத்தைவிட்டே எங்காவது போய் விடுகிறேன். அம்மாளை அதற்காகப் பலி கொடுக்க வேண்டியிருந்தாலும் அதைப்பற்றி நான் கவலைப்படப் போவதில்லை.

கேசவன் (யோசனை செய்து விட்டு): சரோஜா, அம்மாளைப் பற்றி எனக்கு மட்டும் கவலையில்லையா என்ன? அவர்களை நினைத்துத்தான் நீ இங்கே வேலை செய்வதை அனுமதித்திருக்கிறேன்.

சரோஜா : அதற்காக நான் உங்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். ஆனால் நீங்கள் என்னைப் பொய் பேசுகின்றவள் என்று சந்தேகிப்பதை நான்......நான் மௌனமாக ஏற்றுக்கொள்ள முடியாது.

கேசவன் : சரோஜா! குழந்தைகளை ஆதரிக்க ஒரு குழந்தை விடுதி பால பிருந்தாவனம் என்ற பெயரில் ஆரம்பிக்கப் போகிறேன் என்பது உனக்குத் தெரியுமா?

சரோஜா : ஆமாம், கம்பவுண்டர் சொல்லிக்கொண்டிருந்தார். தனியாக வேறோரிடத்திலே அந்த விடுதி இருக்குமென்று அவர் சொன்னார். அதைப் பற்றி இப்பொழுது ஏன் கேட்கிறீர்கள்?

கேசவன் : நீ அதிலே வேலை செய்யப் போக வேண்டும். குழந்தைகளைக் கவனித்துக்கொள்ள வேண்டியது உன்னுடைய பொறுப்பு.

சரோஜா : சரி, டாக்டர். ஆனால் என்னை எதற்காக அங்கே அனுப்ப விரும்புகிறீர்கள்?

கேசவன் ; அப்பொழுது நாம் ஒருவரையொருவர் பார்ப்பதற்கே சந்தர்ப்பம் இருக்காது, நான் இரண்டு நாட்களுக்கொருதரம் மாலை வேளையிலே குழந்தைகளைப் பார்க்க அங்கே வந்து அரைமணி நேரம் இருப்பேன். அப்போ மட்டும் என்னை நீ பார்க்கலாம். அதுவும் குழந்தைகள் கூட்டத்தோடுதான் என்னைப் பார்க்க வேண்டும். தனியாக என்னைப் பார்க்க நீ வரப்படாது.

சரோஜா : ஊரார் பேச்சுக்காக எனக்கு இந்தத் தண்டனையா டாக்டர்? இருந்தாலும் எனக்குச் சந்தோஷம்தான். இதிலிருந்தாவது ஊர் வதந்தி கொஞ்சம் மறையுமானால் நல்லது?

கேசவன் : ஊரார் பேசுவதற்கு நான் பயப்பட வில்லை. அவர்கள் என்ன வேண்டுமானாலும் பேசிக் கொள்ளட்டும். அதைப்பற்றி நான் கவலைப்படமாட் டேன். இருந்தாலும் இந்த ஏற்பாடு நமக்கே நல்ல தென்று நான் நினைக்கிறேன்.

சரோஜா : எனக்கு முழுச் சம்மதம் டாக்டர். அம்மாளைப் பற்றிய கவலையும் இருக்காது.

கேசவன் : சரி, நீ போகலாம்.

[சரோஜா புறப்படுகிறாள். எழுந்து நடந்துகொண் டிருந்த கேசவன் ஆழ்ந்த யோசனையிலிருக் கிறான். திடீரென்று சரோஜாவைக் கூப்பிடு கிறான்.]

...ம்...சரோஜா. நீ போவதற்கு முன்னாலே ஒரு விஷயம்...நீ பொய் பேசுவாயென்று நான் ஒருநாளும் நினைத்ததில்லை.

சரோஜா : ரொம்ப நன்றி, டாக்டர்.

[போகிறாள்.]

திரை

## காட்சி எட்டு

[சரோஜாவின் வீடு. மீனாட்சி ஒரு பக்கத்திலே கட்டிலிலே பிரக்ஞையற்றுப் படுத்திருக்கிறாள். சரோஜா கவலைதோய்ந்த முகத்தோடு அவளைப் பார்த்துக்கொண்டிருக்கிறாள். அந்தச் சமயத் திலே நாகவல்லி உள்ளே நுழைகிறாள். வந்த வள் சற்றுநேரம் மீனாட்சியைக் கவனித்து விட்டுப் பிறகு சரோஜாவிடம் பேச ஆரம்பிக் கிறாள். இருவரும் அறையின் முன்பகுதிக்கு வந்துவிடுகிறார்கள். மாலை நேரம்.]

நாகவல்லி (மெதுவாக) : அக்கா, அம்மாளுக்கு உடம்புக்கென்ன?

சரோஜா (கவலை தோய்ந்த குரலில் மெதுவாக) அம்மாளுக்கு முன்னமேயே இருதயம் பலஹீனப்பட்டிருந்தது. மூன்றுலே ஒருதடவை திடீரென்று மயக்கம் போட்டு அம்மாள் விழுந்ததைப்பற்றி உனக்குச்சொல்லியிருக்கிறேன்.

நாகவல்லி : ஆமாம். அப்பவே மூனு நாலு மாசம் ஆஸ்பத்திரியிலே இருந்ததாகச் சொன்னீர்கள்.

சரோஜா : இப்பொழுது இரண்டாந்தடவையாக அப்படி ஏற்பட்டிருக்கிறது.

நாகவல்லி : சுயநினைவே இல்லையே அக்கா?

சரோஜா : மயக்கம் போட்டு விழுந்ததிலிருந்து இதுவரையிலும் சுயநினைவே வரவில்லை. அப்படியே படுத்திருக்கிறாள். கைகாலை அசைக்கிறதுகூடக் கிடையாது.

நாகவல்லி : அவர் வந்துதான் என்னிடத்திலே சொன்னார். நான் உடனே ஓடிவந்தேன்.

சரோஜா : ராஜாதான் பால பிருந்தாவனத்திற்கு வந்து எனக்கும் அம்மாளுடைய நிலைமையைப்பற்றிச் சொன்னார்.

நாகவல்லி : அம்மாளிடத்திலே என்னமோ ஒரு விஷயத்தைப்பற்றிப் பேசுவதற்காக அவர் வந்தாராம்.

சரோஜா : ஆமாம், நாகவல்லி அந்த விஷயந்தான் அம்மாளுக்கு யமனாக முடிந்துவிட்டது.

[அவள் கண்கள் கலங்குகின்றன.]

நாகவல்லி : அக்கா. அப்படிச் சொல்லாதீர்கள். டாக்டர் வந்து பார்த்தாரா?

சரோஜா : பாலபிருந்தாவனத்திலிருந்து நான் புறப்படுகிறபோதே அவருக்குத் தகவல் அனுப்பிவிட்டு வந்தேன். நான் இங்கு வந்த கொஞ்ச நேரத்திற்குள் அவரும் வந்துவிட்டார்.

நாகவல்லி : நீங்கள் இங்கே எப்போ வந்தீர்கள்?

சரோஜா : நான் வந்து இரண்டுமணி நேரம் இருக்கும்.

நாகவல்லி : அக்கா, டாக்டர் என்ன சொன்னார்?

சரோஜா : அவர் செய்யக்கூடிய சிகிச்சையெல் செய்திருக்கிறார். இருதயத்திற்கு பலம் வரும்படி ஊசி போட்டிருக்கிறார். ஆக்சிஜன் கொடுப்பதற்கும் ஏற்பாடு செய்திருக்கிறார். இன்னும் சிறிது நேரத்திலே கொண்டு வந்துவிடுவார்கள்.

நாகவல்லி : சீக்கிரம் எல்லாம் சரியாகிவிடும் அக்கா. நீங்கள் பயப்படவேண்டாம்.

சரோஜா (சற்று நேரம் மௌனமாக இருந்து, பிறகு பெருமூச்சு விட்டு) : ...ம்...இனிப் பயப்பட்டு என்ன செய்கிறது? எல்லாம் முடிந்துவிட்டது.

நாகவல்லி : ஏனக்கா அப்படிச் சொல்லுகிறீங்க?

சரோஜா : இனி அம்மான் விஷயம் நம்பிக்கை இல்லை நாகவல்லி. இரண்டாவது தடவையாக இந்த இருதய நோய் வந்தால் உயிருக்கே ஆபத்தாக முடியு மென்று டாக்டர் முன்னமேயே சொல்லியிருக்கிறார். எனக்கும் தெரியும்.

நாகவல்லி (இரங்கிய குரலில்) : அம்மா நல்லா சௌக்கியமாக இருந்தாங்களே? போன வாரத்திலேகூட

நான் வந்து ரொம்பநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போனேன். திடீர்னு இப்போ எப்படி வந்தது?

[சரோஜா மௌனமாக இருப்பதைக் கண்டு நாக வல்லி மேலும் கேட்கிருள்.]

அக்கா, இப்போ அம்மாளுக்கு அதிர்ச்சி உண்டாகிற மாதிரி ஏதாவது நடந்ததா?

சரோஜா (சற்றுநேரம் மௌனமாகஇருந்து பிறகு) ...ம்...அதெல்லாம் பேசி என்ன பிரயோஜனம்...? நாகவல்லி, நீ பால பிருந்தாவனத்திற்குப் போய் என்னுடைய கைப்பெட்டியை எடுத்து யாரிடத்திலாவது அனுப்புகிருயா? அவசரத்திலே நான் ஒன்றுமே எடுத்து வரவில்லை.

நாகவல்லி: நான் போகிறேன் அக்கா. ஆனல், முதலிலே ஒரு விஷயம் எனக்குச் சொல்லவேணும்— எதுக்கு டாக்டர் உங்களைப் பாலப் பிருந்தாவனத்துக்குப் போகச் சொல்லிவிட்டார்?

சரோஜா: அதைக் கவனிக்க யாராவது வேண்டாமா?

நாகவல்லி: அக்கா, இதை நான் நம்பவேமாட்டேன். குழந்தை விடுதியைக் கவனிக்கிறதுக்காக மூனு மாசமாக வேலை பழகியவர்கள் இங்கே வந்திருக்கிறது எனக்குத் தெரியாதா? நீங்களே சொல்லியிருக்கிறீர்களே? என் பையனையும் அங்குக்கொண்டுபோகும்படி சொன்னீர்களே? அவர்களெல்லாம் இருக்கிறபோது நீங்கள் எதுக்கு அங்கே போகவேணும்?

சரோஜா: நாகவல்லி, நீ குழந்தைமாதிரி சும்மா இப்படியெல்லாம் கேட்காதே.

நாகவல்லி : அக்கா, எங்கிட்டக்கூட சொல்லப் படாதா?

சரோஜா : நீ என்மேலே எத்தனை அன்பு வைத் திருக்கிறாய்? உன்னிடம் சொல்லாமல் யாரிடம் சொல்லி ஆறுதலடையப்போகிறேன்? உன் கணவர்கூட டாக்ட ரிடம் எனக்காகப் பரிந்துதான் நேற்றுப் பேசியிருக்கிறார். ஆனால், அதுவே எனக்குப் பாதகமாய் முடிந்துவிட்டது.

நாகவல்லி (கவலையோடு) : டாக்டர் அதற்காகக் கோபித்துக்கொண்டாரா?

சரோஜா : ஆமாம், நாகவல்லி—அதுவே அம்மா ளுக்கு இப்படி வந்துமுடிந்தது. அவளுக்கு எப்படியோ விஷயம் தெரிந்துபோய்விட்டது.

[தேம்புகிறாள்.]

நாகவல்லி : அக்கா, டாக்டருக்கு இத்தனை கல் நெஞ்சம் ஆகாது...

சரோஜா : ...ம்...அவர்மேல் குற்றமில்லை நாக வல்லி, இப்போது நீ போய் என் பெட்டியை எடுத்து அனுப்புகிறாயா?

நாகவல்லி : சரியக்கா...நானே போய் எடுத்து வருகிறேன்...அப்புறம் எல்லாம் பேசுவோம்...அவர் வந்து என்னிடத்திலே சொன்னாரு—எனக்கு நல்லாப் புரியவே இல்லே.

சரோஜா : ராஜு இதைப்பற்றி உன்னிடத்திலே சொன்னாரா?

நாகவல்லி : ஆமாக்கா...அவர் அம்மாளிடத்திலே என்னமோ சொன்னாராம். அப்புறம் அம்மா மயக்கம்

போட்டு விழுந்துட்டாங்களாம். அவர் என்னவோ மாற்றி மாற்றிப் பதட்டத்திலே சொன்னார். எனக் அப்போ சரியாகத் தெரியவில்லை.

சரோஜா (யோசனையோடு): அப்படியா? சரி, சீக்கிரம் போய்விட்டு வா.

[நாகவல்லி புறப்படுகிறாள்.]

## மூன்றும் அங்கம்

### காட்சி ஒன்று

[கேசவன் தனது மாளிகையில் ஓர் விசாலமான அறையில் அமர்ந்திருக்கிறான். சரோஜா உள்ளே மெதுவாக நுழைகிறாள். காலை நேரம். மணி பத்திருக்கும்.]

கேசவன் (கடுமையான குரலில்): சரோஜா, இப்போ நீ இங்கே எதற்காக வந்தாய்? நீ தனியாக என்னைப் பார்க்க வரக்கூடாதென்று சொல்லியதை மறந்துவிட்டாயா?

சரோஜா: ஒரு அவசரமான விஷயம், டாக்டர், மன்னிக்க வேணும்.

கேசவன்: என்ன அப்படி அவசரம்?

சரோஜா: நான் எனக்காக வரவில்லை. அந்த நாக வல்லி விஷயமாகத்தான் வந்தேன்.

கேசவன்: அவளுக்கென்ன வந்தது? அவளே வந்திருக்கலாமே?

சரோஜா: அவளுக்கு உங்களிடம் விஷயத்தைத் தெளிவாகச் சொல்லத் தெரியாது. அதற்காக என்னை வரும்படி கெஞ்சினாள்.

கேசவன்: சரி, விஷயத்தைச் சொல்—அவளெங்கே? அவளையும் கூடவே அழைத்து வந்திருக்கலாமல்லவா?

சரோஜா: அவளுந்தான் வந்திருக்கிருள். வெளியிலே கதவருகில் உட்காரும்படி சொல்லிவிட்டு வந்தேன்.

கேசவன்: ஏன், அவளும் உள்ளே வரலாமே?

சரோஜா: ஒரு விஷயம் டாக்டர். இப்போ நாகவல்லியைப் பார்த்தால் அடையாளம் கண்டுகொள்வது கூடக் கஷ்டம். அவள் முகம் அப்படிக் கெட்டுப்போய் விட்டது.

கேசவன்: நாகவல்லி முகமா? ஏன்?

சரோஜா: முதலில் அவளுடைய குழந்தைக்குப் பெரிய அம்மை வந்ததாம். பாவம், அந்தக் குழந்தைக்கு இரண்டு கண்களும் பார்வை இல்லாமல் போய்விட்டன. பிறகு இவளுக்கும் அம்மை வந்து இவளுடைய முகமே வடுவிழுந்து போய்விட்டது.

கேசவன்: எப்போ அம்மை வந்தது? எனக்கு விஷயமே தெரியவில்லையே?

சரோஜா: வந்து இரண்டு மாதத்திற்கு மேலாகி விட்டது. இந்த நோய்க்கு வைத்தியம் பண்ணக்கூடா தென்று இங்கே வந்து சொல்லவில்லையாம்.

கேசவன்: வைத்தியம் செய்யாவிட்டாலும் சில எச்சரிக்கைகளாவது செய்திருக்கலாமல்லவா? உனக்காவது விஷயம் தெரியுமா இல்லையா?

சரோஜா: எனக்கும் தெரியாது. குழந்தையைப் பால பிருந்தாவனத்திற்கு எடுத்துக்கொண்டு வரும்படி நாகவல்லியிடம் சுமார் மூன்று மாதங்களுக்கு முன்பு

சொல்லியிருந்தேன். ஆனால், அவள் வரவில்லை. வேறு தகவலும் தெரியவில்லை. அதற்குப் பிறகு இன்றுதான் அவளைப் பார்த்தேன். அவளுக்கு ஏற்பட்ட கஷ்டத்தை விட இப்பொழுது அவள் கணவன் நிலைமைதான் மோசமாக இருக்கிறது:

கேசவன்: யார் ராஜுவுக்கா?

சரோஜா: ஆமாம், திடீரென்று பயித்தியம் போலத் தாறுமாறாகப் பேசிக்கொண்டிருக்கிறாராம்.

கேசவன்: எத்தனை நாட்களாக அப்படி?

சரோஜா: சென்ற இரண்டு மூன்று நாட்களாக அப்படி இருக்கிறதாம். அடிக்கடி புத்தி மாறிப் போகிறதாம்.

கேசவன்: நாகவல்லியை உள்ளே அழைத்து வா.

[சரோஜா வெளியில் சென்று நாகவல்லியை அழைத்து வருகிறாள்.]

நாகவல்லி: டாக்டர், அக்கா இங்கே வந்ததுக்கு அவர்கள் மேலே கோவிச்சுக்கப் படாது. நான்தான் அவர்களை என்னுடன் வரும்படி கெஞ்சினேன். அவுங்க அம்மா இறந்ததிலிருந்து அக்கா ரொம்ப மனசு நொந்து இருக்கிறாங்கோ.

கேசவன்: இதைச் சொல்லவா நீ இப்போ வந்தாய்?

நாகவல்லி: கோவிச்சுக்காதேங்கோ. முதலில் அதைச் சொல்ல வேணும்னு நினைத்தேன். அக்காளிடத்திலே கோவங்கொள்ளப்படாது.

கேசவன்: ராஜு இப்போ எப்படி இருக்கிறார்?

நாகவல்லி: நீங்களே வந்து பாருங்கள் டாக்டர். அன்னைக்கு அக்கா அவுங்க அம்மா இறந்தபோது இவர்

சும்மா அழுதுகொண்டே இருந்தாரு. என்னமோ கொஞ்ச நாளாக சந்தோஷமாகவே இருக்கிறதில்லே—என்னமோ யோசனை பண்ணிக்கிட்டே இருந்தாரு. என்னிடத்திலேகூட சரியாகப் பேசுவதில்லே.

கேசவன்: எத்தனை நாளா அப்படி?

நாகவல்லி: உங்ககிட்டம் ஒரு நாள் வந்து பேசிவிட்டுப் போனரே அப்போ இருந்து அப்படித்தானுங்க...அதுக்கப்புறம் சரோஜா அக்கா அவுங்க அம்மா மீனாட்சியம்மா செத்துப் போனுங்க.. குழந்தைக்குட் எனக்கும் அம்மை கண்டு இப்படி ஆயிட்டுதுங்க... குழந்தைக்குப் பார்வையே போய்விட்டமாதிரி இருக்குதுங்க.

கேசவன்: சரோஜா, நாகவல்லி சொல்லுவது எனக்குச் சரியாக விளங்கவில்லே. நானே நேரில் போய் ராஜாவைப் பார்க்கிறேன்.

நாகவல்லி: அக்கா, நீங்களும் வாங்க...எனக்கு பயமாக இருக்குது...அவரு என்னென்னமோ தாறுமாறாகப் பேசுறாரு—கேட்கறதுக்கே—பயமாக இருக்குது. இந்த மாதிரி நான் பார்த்ததே இல்லே. சில சமயத்தில் சிரிக்கிறார்; சில சமயத்திலே அழுகிறார். கோபமாகப் பேசுகிறார்.

கேசவன்: சரோஜா, நீ நாகவல்லியோடு இப்பொழுதே போய் ராஜாவின் நிலைமையைக் கவனித்துப் பார். நான் இன்னும் அரை மணியில் புறப்பட்டு வருகிறேன்.

[சரோஜாவும் நாகவல்லியும் புறப்படுகிறார்கள். கேசவன் யோசனையில் ஆழ்ந்திருக்கிறான்.]

திரை

## காட்சி இரண்டு

[ராஜு-வின் இல்லம். ராஜு முதுகை முன்றல் காட்டிக் கொண்டு தலை குனிந்து ஒரு நாற்காலியில் அமர்ந்திருக்கிறான். நாகவல்லியும். சரோஜாவும் நின்று கொண்டிருக்கிறார்கள், நாகவல்லி அவனைப் பேசும்படி செய்ய முயல்கிறாள். காலை பதிறெரு மணி இருக்கும்.]

நாகவல்லி: இதோ, இப்படித் திரும்பி உட்காருங்கள். சரோஜா அக்கா வந்து அரை மணி நேரம் ஆகப் போகுது. உங்களோடு பேச வேணுமென்று ஆசைப் படுகிறார்கள்.

[ராஜு மௌனம் சாதிக்கிறான்.]

திரும்பிப் பாருங்கள்......சரோஜா அக்காளைப் பற்றி அடிக்கடி கேட்பீர்களே? அவுங்க வந்திருக்கிறபோது பேசாமலிருந்தால் எப்படி?

சரோஜா (ராஜு பேசாமலிருப்பதைக் கண்டு): உங்களுக்கு உடம்புக்கு எப்படி இருக்கிறது?

[ராஜு திரும்பிச் சரோஜாவைப் பார்த்து உட்காருகிறான். அவளை உற்றுப் பார்க்கிறான். பிறகு பயித்தியம் போலச் சிரிக்கிறான். திடீரென்று கையால் முகத்தை மூடிக்கொண்டு வாய்விட்டு அழத் தொடங்குகிறான்.]

நாகவல்லி: இதோ அக்காளைப் பாருங்கள். எதுக்கு இப்படி அழுகிறீர்கள்?

சரோஜா: இன்னும் கொஞ்ச நேரத்திலே டாக்டர் வந்துவிடுவார். அவர் பார்த்து மருந்து கொடுத்தால் எல்லாம் குணமாகிவிடும். பயப்படாதீர்கள்.

ராஜு (உரக்கச் சிரித்துக்கொண்டு): பயமா? நானா பயந்தவன்? அதெல்லாம் அன்றைக்கே போயிட்

டுதே? கணக்குப் போட்டே பார்த்தாச்சு. எல்லாம் ஒரே அடியாப் போச்சு.

[எழுந்திருக்க முயன்று பிறகு தடுமாறிக்கொண்டு பழையபடி நாற்காலியில் அமர்கிறான்.]

நாகவல்லி : இப்படித்தானக்கா, என்னென்னமோ பேசிக்கிட்டே இருக்கிறார். சில சமயத்திலே நல்லா இருக்கிறார். நல்ல நினைவோடு பேசுகிறார். அப்புறம் திடீரென்று எதையோ நினைச்சு அழ ஆரம்பித்து விடுகிறார்.

[கேசவன் உள்ளே நுழைகிறான்.]

சரோஜா : அதோ, டாக்டர் வந்துவிட்டார். பயப்படாதே நாகவல்லி.

நாகவல்லி (ராஜு அருகில் சென்று) : டாக்டர் வந்திருக்கிறார்.

[கேசவன் அமருவதற்காக சரோஜா ஒரு நாற்காலியை முன்னால் கொண்டு வந்து போடுகிறாள்.]

கேசவன் (நாற்காலியில் அமராமல் ராஜு அருகில் சென்று): ராஜு, உங்களைப் பார்த்து ரொம்ப நாள் ஆகிறது. எங்கே அந்தப் பக்கமே வரக் காணோமே?

ராஜு (கேசவனை விறைத்து விறைத்துப் பார்த்து விட்டு) : யாரு இவன்? இவனா டாக்டர்?

[உரக்கச் சிரிக்கிறான்.]

நாகவல்லி : டாக்டர்தான் வந்திருக்கிறார். சரோஜா அக்கா சொல்லித்தான் டாக்டர் வந்தார்.

ராஜு : இங்கே என்னத்துக்கு வந்திருக்கிறான்? இன்னும் என் உயிரை வாங்கப் பாக்கிறானா? செத்துப் போன டாக்டர்.

[பைத்தியப் பார்வை பார்க்கிறான்.]

நாகவல்லி : சும்மா இருங்க—அப்படியெல்லாம் பேசாதீங்க...

ராஜு : டாக்டரே, இந்த நாகவல்லி விஷப் பாம்பு உங்களைக் கடிச்சுட்டுதா? என்னைக் கடிச்சுத்தான் நான் இந்தக் கதிக்கு வந்தேன்...டேய்...எங்கடா அவன்—என் குழந்தைக்குக் கண்ணைப் பிடுங்கினவன்—ஆரடா அவன்?

[கண்ணை உருட்டி விழிக்கிறான்.]

கேசவன் : ராஜு, இப்படி வந்து உட்காருங்கள். உங்களிடம் கொஞ்சம் பேசவேணும் வாருங்கள்.

[நாற்காலியில் அமர்கிறான்.]

ராஜு : பேசறதா? உங்கிட்டியா பேசறது? (உரக்கச் சிரிக்கிறான்) ஒரு பொம்பளையைக் கலியாணம் பண்ணிக்கத் திராணியில்லாதவன்—இங்கே எதுக்கு வந்தே? அவள்தான் அவுங்க அம்மாளைப் பேயா என் மேலே விட்டுட்டாளே? அடேய்...டேய்...யாருடா அந்தப் பேய்? சரோஜாவா? அவ அம்மாளா?...டாக்டர், அந்தக் கத்தைச் சாத்து...ஓடு ஓடு...விடாதே விடாதே... அடடே கரை மேலே ஓடுதே...என்னோடே ஓடி வாங்க, ஓடிவாங்கோ—அந்தப் பேயைப் பிடிடா, பிடிடா.

[திடுதிடுவென்று அங்குமிங்கும் ஓடுகிறான். பிறகு தடாரென்று நாற்காலியில் மோதி விழுகிறான்.]

சரோஜா : நாகவல்லி, அவர் கீழே விழுந்துவிட்டாரே? நெற்றியிலேகூட அடிபட்டிருக்கிறது.

கேசவன் (சட்டென்று எழுந்து வந்து) : சரோஜா, நீ பேசாமல் இரு...நாகவல்லி, ஒரு செம்பிலே தண்ணீர் கொண்டு வா. அவர் முகத்திலே தெளிக்கலாம்.

[நாகவல்லி வேகமாகச் செம்பில் தண்ணீர் கொண்டு வருகிறாள்]

நாகவல்லி : இதோ, தண்ணீர் இந்தாங்கோ,

[கேசவன் தண்ணீரை ராஜு முகத்தில் தெளிக்கிறான். ராஜு மெதுவாகக் கண்ணை விழித்து பார்க்கிறான். அவன் நெற்றியில் ரத்தக்கறை இருக்கிறது.]

ராஜு : ஆமாண்டா, ஆட்டுக்கிடா நான்தான்—தண்ணீர் போட்டுத் துளுக்கியாச்சு. இனி வெட்டித் தள்ளு......

கேசவன் : ராஜு, அப்படியே கொஞ்சம் அமைதியாகப் படுத்திருங்கள்—மனதை அலட்டிக் கொள்ளாதிர்கள்.

[ராஜு மெதுவாகச் சாய்ந்து கண்ணை மூடுகிறான். பிறகு, எழுந்திருக்கிறான்.]

ராஜு : யார் இது? டாக்டரா? இது யாரு? சரோஜாவா? ஆமா, இங்கே எதுக்கு வந்திங்க? கலியாணப் பத்திரிகை எங்கே? கொடுத்துட்டுப் போங்க......ஆமா சரோஜா, என் கண்ணையா பிடுங்கிறாய்? புருஷனைத் தின்ன தெய்வங் கண்ணைத்தான் பிடுங்கும்......

[தேம்பித் தேம்பி அழுகிறான்.]

கேசவன் : ராஜு, இதோ என்னைப் பாருங்கள். இப்போ உங்களுக்கு ஒரு மருந்து கொடுக்கிறேன். அதைச் சாப்பிடுங்கள். எல்லாம் சரியாகிவிடும். இப்படி வந்து நாற்காலியிலே உட்காருங்கள்.

[கேசவன் ராஜுவை மெல்ல நாற்காலியில் உட்காரவைக்கிறான்.]

நாகவல்லி, இவர் அப்படியே உட்கார்ந்திருக்கும்படி பார்த்துக் கொள். நான் மருந்தை எடுக்கிறேன்.

[நாகவல்லி ராஜு அருகே செல்கிறாள். கேசவன் தனது கைப்பெட்டியிலிருந்து மருந்து எடுத்து வருகிறான்.]

சரோஜா : நாகவல்லி, அவர் முகம் வேர்க்கிறது. விசிறி எடுத்துக் கொஞ்சம் விசு.

[நாகவல்லி விசிறி எடுத்து விசுகிறாள்.]

கேசவன் : ராஜு, இதோ, இந்த மாத்திரையை வாயில் போட்டு அப்படியே விழுங்கிவிடுங்கள். எல்லாம் சரியாகிவிடும்.

[மருந்தை ராஜு வாயில் போடுகிறான். ராஜு மௌனமாக அதைச் சாப்பிடுகிறான்.]

நாகவல்லி, அந்தப் படுக்கையைக் கட்டிலிலே அப்படியே விரித்துப் போடு. இவர் கொஞ்சம் படுத்திருக்கட்டும்......ராஜு, அந்தக் கட்டிலிலே போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்.

[ராஜுவை மெல்லக் கட்டிலில் படுக்கச் செய்கிறான்.]

நாகவல்லி : டாக்டர், அவர் அப்படியே தூங்குகிற மாதிரி இருக்கிறதே.

கேசவன் : ஆமாம். இந்த மருந்தைச் சாப்பிட்டால் தூக்கம் வந்துவிடும். இன்னும் வேண்டிய மருந்தை ஆஸ்பத்திரியிலிருந்து அப்புறம் அனுப்புகிறேன்.

நாகவல்லி (கவலையோடு) : அதைச் சாப்பிட்டால் எல்லாம் குணமாகிவிடுங்களா, டாக்டர்?

கேசவன் : நான் தினமும் வந்து எல்லாம் கவனித்துக் கொள்ளுகிறேன். நீ கவலைப்படாதே.

நாகவல்லி : டாக்டர், நீங்கள்தான் காப்பாத்த வேணும். எப்படியாவது அவருக்கு உடம்பு நல்லா ஆகிறமாதிரி செய்யுங்கள்.

கேசவன் : என்னால் ஆனதையெல்லாம் செய்கிறேன். நீ மாத்திரம் பயப்படாமல் தைரியமாக இருக்க வேணும். சரோஜாவையும் இங்கு வந்து தினமும் பார்த்துவிட்டுப் போகச் சொல்லுகிறேன்.

நாகவல்லி : ஆமாங்க, டாக்டர். அக்காள் இங்கே வந்துவிட்டுப் போனால் எனக்குக் கொஞ்சம் தைரியமாக இருக்கும்.

சரோஜா : குழந்தையையும் பார்த்துக் கொண்டு இவரையும் கவனிக்க உன்னாலே முடிகிறதா, நாகவல்லி?

நாகவல்லி (விசனத்தோடு): இல்லையக்கா. அதுக்குக் கண் சரியாக இருந்தாலும் எப்படியோ சமாளிக்கலாம். இப்போ......

கேசவன் : அந்தக் குழந்தையை நம்ம பாலபிருந்தாவனத்திற்கு அனுப்பிவிடு நாகவல்லி......(சரோஜாவைப் பார்த்து) சரோஜா, நீ அதை எடுத்துக்கொண்டு போய் கவனித்துக் கொள்.

சரோஜா : நாகவல்லி, டாக்டர் சொல்கிறபடி செய்வதுதான் நல்லது. இல்லாவிட்டால் உனக்குத்தான் கஷ்டம். அவரையும் நன்றாகக் கவனிக்க முடியாது.

நாகவல்லி : சரியக்கா. குழந்தை உங்களிடத்திலே இருந்தால் எனக்கும் கவலையிருக்காது. ஆனால், உங்களுக்குத்தான் ரொம்பக் கஷ்டமாக இருக்கும்.

கேசவன் : பாலபிருந்தாவனம் குழந்தைகளை வைத்துக் காப்பாற்றத்தானே இருக்கிறது?

சரோஜா (நாகவல்லியைப் பார்த்து) : எனக்கு ஒரு கஷ்டமும் இருக்காது. எனக்குச் சந்தோஷமாகவே இருக்கும். நீயும் இஷ்டப்பட்டபோது வந்து குழந்தையைப் பார்த்துக் கொள்ளலாம்.

கேசவன் : சரோஜா, இன்றைக்கே குழந்தையைப் பாலபிருந்தாவனத்திற்கு எடுத்துக் கொண்டு போய்விடு.

[சரோஜா நாகவல்லியைப் பார்க்கிருள். நாகவல்லி கேசவனைப் பார்த்துப் பதில் சொல்லுகிருள்.]

நாகவல்லி : சரிங்க, டாக்டர், நீங்கள் சொல்லுகிற படியே குழந்தையை அனுப்பிவிடுகிறேன்.

கேசவன் : நீ மட்டும் தைரியமாக இருக்கவேணும். நான் மறுபடியும் சாயங்காலம் வந்து ராஜுவைப் பார்க்கிறேன்.

[பெட்டியை எடுத்துக்கொண்டு புறப்பட்டுப் போகிருன்.]

நாகவல்லி (பின்னுலேயே கொஞ்ச தூரம் வந்து): எனக்குத் தைரியமெல்லாம் நீங்கள்தான். உங்களையும் அக்காளையுந்தான் நம்பியிருக்கிறேன்.

[கேசவன் மறைகிருன்.]

திரை

## காட்சி மூன்று

[கேசவன் தனது மாளிகையிலுள்ள ஓர் விசால மான அறையில் அமர்ந்து ஏதோ ஒரு வைத்திய நூலைப் படித்துக்கொண்டிருக்கிருன். சரோஜா மெதுவாக வந்து முன்னுல் நிற்கிருள். மாலை மூன்று மணி.]

கேசவன் : என்ன சரோஜா, இப்போ இங்கு எதற்கு வந்தாய்?

சரோஜா : ராஜு விஷயமாக உங்களிடம் பேச வேண்டுமென்று வந்தேன்.

கேசவன் : அவருடைய விஷயம் என்று சொல்லிக் கொண்டு, நீ இப்போ அடிக்கடி இங்கு வர ஆரம்பித் திருக்கிருய் இது சரியல்ல,

சரோஜா (சற்றுக் கோபம் கொண்டவள்போல்) ஏன் ஊரார் நிந்தனை மறுபடியும் வருமென்று பயமா?

கேசவன்: அதற்கு நீதான் பயந்தவள்; எனக்கு அதைப்பற்றி லட்சியமில்லை.

சரோஜா: பிறகு எதற்காக இன்னும் இப்படிக் கடுமையான நிபந்தனை விதிக்கிறீர்கள்?

கேசவன்: அநாவசியமாக ஒரு கெட்ட வதந்தி வராமல் பார்த்துக்கொள்வது நல்லதுதானே? அப்பொழுதுதான் நமது சேவையும் நல்ல பலன் கொடுக்கும்.

சரோஜா: என்னுடைய உள்ளத்திலே களங்கம் கிடையாது. உலகம் அதை என்றைக்காவது அறிந்து கொள்ளும். அப்போது இந்த வதந்திகளெல்லாம் மறைந்தோடிப் போகும். அந்தத் தைரியம் எனக்கிருக்கிறது.

கேசவன்: உனக்கு இருக்கலாம். ஆனால், எனக்கு அத்தனை தைரியம் இல்லை.

சரோஜா (கோபத்தோடு): அப்போ உங்க மனசு இன்னும் தடுமாறிக்கொண்டிருக்கிறதென்று தெரிகிறது. அதிலே தடுமாற்றம் இல்லாவிட்டால் தைரியம் தானாகவே வரும். எனக்குத் தடுமாற்றமே கிடையாது.

கேசவன் (கடுமையாக): சரோஜா நீ வந்த காரியத்தைச் சொல்லிவிட்டுப் போ. இனிமேல் இங்கு என்னுடைய அனுமதியில்லாமல் வருவதானால்—பிறகு நீ பாலபிருந்தாவனத்திலும் வேலை செய்ய முடியாது. இந்த நிபந்தனையை நான் என்றும் மாற்றமாட்டேன்.

சரோஜா (பணிவாக): மன்னிக்கவேணும், டாக்டர். நான் ஏதாவது உங்கள் மனது புண்படும்படி சொல்லியிருந்தால் அதற்காக வருந்துகிறேன்.

கேசவன் : ராஜு இப்பொழுது எப்படியிருக்கிறார்?

சரோஜா : இந்த ஒரு மாதமாக மருந்து கொடுத்தும் ஒன்றும் குணம் தெரியவில்லை. தூங்குவதற்கு மருந்து கொடுக்காவிட்டால் இரவிலே தூங்குவதே இல்லையாம். ஏதேதோ பேசிக்கொண்டே இருக்கிறாராம்.

கேசவன் : தூக்க மருந்து ஒவ்வொரு இரவிலும் விடாமல் கொடுக்கவேணும். இல்லாவிட்டால் மனக் கோளாறு மேலும் அதிகமாகிவிடும்.

சரோஜா : டாக்டர், ராஜுவின் மனக்கோளாறுக்கு அடிப்படையாக ஏதோ ஒரு காரணம் இருக்கவேணும். மனத்திலே என்னவோ ஒரு போராட்டம் இருக்கிறது.

கேசவன் : அதுதான் தெளிவாகத் தெரிகிறதே? அவர் குழந்தைக்குக் கண் போய்விட்டது. நாகவல்லி உடம்பே அவலட்சணமாக மாறிவிட்டது. அதுதான் காரணம். இரண்டாவது தடவையாகக் கலியாணம் செய்துகொண்டும் இப்படியானால் மனம் பேதலிக்காதா என்ன?

சரோஜா : அது மட்டும் இருக்காது டாக்டர். வேறே என்னவோ முக்கியமான காரணம் இருக்க வேணும். எனக்கென்னவோ அப்படித்தான் தோன்று கிறது.

கேசவன் (சிரித்துக்கொண்டே கேலியாக) : ஓகோ, இப்போ நீ மனத் தத்துவம் படிக்கிறாய் என்பதை நான் மறந்துவிட்டேன். அடிமனம், மறைமனம் என் றெல்லாம் படித்ததிலே உனக்கு இப்படி ஆலோசனை போகிறதுபோல் தெரிகிறது.

சரோஜா : டாக்டர், நான் கூறுவது வெறும் கற்பனையல்ல. பல நாட்களாக ராஜுவின் நடத்தை யையும் பேச்சையும் கவனித்துத்தான் சொல்லுகிறேன்.

கேசவன் (கேலியாக): சரி. மன மருத்துவம் பண்ணுவதற்கு நீ தனியாக ஒரு போர்டு போட்டுவிட வேண்டியதுதான்.

சரோஜா: இது கேலி செய்கிற விஷயமல்ல டாக்டர். உங்களோடு கேலி பேசிக்கொண்டிருக்க நான் இங்கு வரவில்லை.

கேசவன்: சரோஜா, விஷயத்தை நேராகப் பார்க்கத் தெரியவில்லை உனக்கு. ராஜுவின் முதல் மனைவியை இழந்த வருத்தந்தான் இப்படி வேலை செய்கிறது. அது இத்தனை நாட்களாக உள்ளே அடங்கிக் கிடந்து இப்போது இப்படி வெளிப்பட்டிருக்கிறது.

சரோஜா: எனக்கு அப்படித் தோன்றவில்லை. முதல் மனைவியை இழந்ததற்காக அவர் வருந்துவதாகச் சொல்லுவது சரியல்ல.

கேசவன்: நீ இப்படி நினைப்பதற்கு உன்னுடைய மனதுக்குள்ளே மறைந்து கிடக்கிற வேறொரு ஆசைதான் காரணம்.

சரோஜா (ஆத்திரமாக): அப்படி என்ன ஆசை எனக்கு?

கேசவன்: ராஜு தன் முதல் மனைவி இறந்ததற்காக வருந்தவில்லை என்று நிச்சயமாகிவிட்டால், நீ என்னைக் கலியாணம் செய்துகொள்ளுவதற்குத் தடை இருக்காதல்லவா?

சரோஜா (மேலும் ஆத்திரமாக): டாக்டர், இதெல்லாம் என்னுடைய அந்தரங்க ஆசையா? உங்களுடைய ஆசையா? எனக்கு அப்படி ஒன்றும் ஆசை கிடையாது.

கேசவன் : சரோஜா, இதையெல்லாம் பேசி என்ன லாபம்......இப்போ நீ எதற்காக வந்தாயோ அதைச் சொல்லிவிட்டுப் போ. வீணுக மனதைக் குழப்பிக் கொள்ளவேண்டாம்.

சரோஜா : ராஜுவைச் சென்னைக்கு அழைத்துக் கொண்டு போய் ஒரு மன மருத்துவரிடம் காட்ட வேணும். அவருடைய மனத்திலுள்ள போராட்டத்தை எப்படியாவது அகற்ற வேணும். அப்பொழுதுதான் அவருக்குக் குணம் ஏற்படும்.

கேசவன் : சரி, உன் இஷ்டப்படியே செய்து பார்ப் போம். இன்றைக்கு இரவு ரயிலிலேயே புறப்படலாம். நானும் வந்து எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டு வருகிறேன். ராஜுவையும், நாகவல்லியையும் புறப்படு வதற்குத் தயாராக இருக்கும்படி இப்பொழுதே போய்ச் சொல்லி ஏற்பாடு செய்.

சரோஜா : மனமருத்துவ சிகிச்சை என்றுல் கொஞ்சம் நாளாகுமல்லவா? சென்னையிலேயே தங்க வேண்டியிருக்கும்.

கேசவன் : ஆமாம், தனியாக ஒரு வீடு அமர்த்திக் கொண்டு அங்கேயே இருக்கலாம். நாகவல்லிக்குத் துணை யாக நீயும் அங்கேயே இருக்கவேணும். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை நான் கவனித்துக்கொள்கிறேன்.

சரோஜா : நான் அங்கே இருப்பதா? அப்போ பால பிருந்தாவனத்தில் மேற்பார்வைக்கு யாரும் இல்லையே?

கேசவன் : அதை நான் பார்த்துக் கொள்கிறேன். நீ கூட இருக்காவிட்டால் நாகவல்லி கஷ்டப்படுவாள். அவள் ஒன்றுமே அறியாதவள்.

சரோஜா : சரி டாக்டர். ராஜாவின் நிலைமையை நன்முக ஆராய்ச்சி செய்ய எனக்கும் சந்தர்ப்பம் கிடைக்கும்.

கேசவன் : சரோஜா, சென்னைக்கு உன்னைப் போகும்படி நான் சொல்லுவதெல்லாம் ஒரே ஒரு காரணத்திற்காகத்தான். நாகவல்லிக்கு நீ உதவியாக இருக்கவேணும். அதுதான் உன்னுடைய வேலை. வேறு ஏதாவது நினைத்துக்கொண்டு மனக்கோட்டை கட்டாதே.

சரோஜா : சரி டாக்டர். எப்படியாவது ராஜா குணமடைந்தால் போதும்.

கேசவன் : அதுதான் என்னுடைய ஆசை. அவருக்கு என்னால் ஏற்பட்ட துன்பத்திற்கு ஈடு செய்ய நான் என் வாழ்க்கை முழுவதும் அவருக்கு என்னுல் இயன்ற உபகாரமெல்லாம் செய்தாகவேண்டும். நீ உடனே போய் வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் கவனி.

[சரோஜா மௌனமாக வெளியேறுகிருள்.]

திரை

## காட்சி நான்கு

[சென்னைப் பட்டிணத்திலே தியாகராய நகரில் ஓர் இல்லம். நாகவல்லியும், சரோஜாவும் முன் பக்கத்து அறையில் நாற்காலியில் அமர்ந்து பேசிக்கொண்டிருக்கிருர்கள். மாலை சுமார் ஐந்து மணி.]

நாகவல்லி : அக்கா, பட்டணத்துக்கு வந்து இன்னைக்கு எத்தனை நாளாகுது?

சரோஜா: சரியாக இன்றைக்குப் பதினைந்து நாள்— ஏன் அதைப்பற்றிக் கேட்கிருய்?

நாகவல்லி : பதினைந்து நாள்தானா? எனக்கென்னமோ ரண்டு மாசமானதுபோலத் தோணுது. அக்கா, நீங்கள் என்கூட இல்லாதிருந்தால் என்னாலே ஒன்றும் செய்திருக்க முடியாது. ஆனால், உங்களுக்குத்தான் வீண் தொந்தரவு.

சரோஜா : எனக்கென்ன தொந்தரவு? உன் கணவருக்கு உடம்பு குணமானால் போதும். எனக்கு இது தொந்தரவே இல்லை.

நாகவல்லி : இப்பவே பாதி குணமாய்விட்டது; இல்லையா அக்கா?

சரோஜா : ஆமாம்; சீக்கிரத்திலே பூராவும் குணமாகிவிடும். இந்த மன மருத்துவர் கெட்டிக்காரர். மன வியாதியைக் கண்டுபிடிக்கிறதிலே அவருக்கு நல்ல பேருண்டு.

நாகவல்லி : அக்கா, அவருக்குப் பணம் கொடுக்க வேண்டாமா?

சரோஜா : அதைப்பற்றி நீ கவலைப்படாதே. டாக்டர் அதையெல்லாம் கவனித்துக்கொள்ளுவார்.

நாகவல்லி : நம்ம டாக்டருக்கு எங்களாலே எத்தனை செலவு? இங்கே வீட்டிலே ஆகிற செலவுக்குக் அவர்தானே கொடுக்கிறார்?

சரோஜா : டாக்டர் சந்தோஷமாகக் கொடுப்பார். அவருக்கு உங்கள் குடும்பமென்றால் செலவு ஒன்றையும் கவனிக்கமாட்டார்.

நாகவல்லி : அவர் கொடுக்காமல் போனால் எங்களாலே இப்போ செலவு செய்ய முடியாது. அக்கா, எங்கள் வியாபாரத்திலே இந்த வருஷம் பெருத்த நஷ்டம். அது உங்களுக்குத் தெரியுமா?

சரோஜா : நஷ்டமா? இதுவரையிலும் நீ சொல்லவில்லையே?

நாகவல்லி : நேற்றுத்தான் எனக்கும் தெரியும். நேற்றைக்கு நல்ல நினைவு இருந்தபோது அவர் எல்லாவற்றையும் சொன்னார். அழுதுகொண்டே சொன்னார்.

சரோஜா : அதையெல்லாம் இப்போ ராஜு நினைக்கப்படாது. அவர் மனதிலே கவலையே இல்லாமல் இருக்க வேணும்.

நாகவல்லி : அக்கா, அவருக்கு நல்லநினைவு வருகிற போதெல்லாம் என்னமோ ரொம்பக் கவலையாக இருக்கிறார்...ஒன்னும் என்னிடங்கூடச் சொல்லுகிறதில்லை. என்னைக் கண்டால்கூட அவருக்கு இப்போ அத்தனை பிடிக்கவில்லை.

சரோஜா : எல்லாம் கொஞ்ச நாளிலே சரியாகி விடும். அவர் மட்டும் தைரியமாக இருக்கவேணும். கவலைப்படாதே.

நாகவல்லி : டாக்டர் எப்போ வருவார்? இங்கே நம்மை விட்டுவிட்டுத் திருச்சிஞப்பள்ளிக்குப் போனவர் அப்புறம் வரவே இல்லையே?

சரோஜா : வராவிட்டாலும் தினமும் மன மருத்துவருக்குக் கடிதம் எழுதிக்கொண்டுதான் இருக்கிறார். ராஜுவின் நிலைமையைப் பற்றித் தினமும் அவருக்கு இங்கிருந்து எழுதியனுப்புகிறார்கள்.

நாகவல்லி : அக்கா. டாக்டர் உங்களுக்குக் கடிதம் எழுதமாட்டாரா?

சரோஜா : எனக்கு எதற்கு எழுதுகிறார்? இன்றைக்கு இங்கே வருகிற விஷயத்தைக்கூட மன மருத்துவருக்குத்தான் எழுதியிருக்கிறார்.

நாகவல்லி (ஆவலோடு): டாக்டர் இன்றைக்கு வருவாரா அக்கா?

சரோஜா: ஆமாம், இன்னும் கொஞ்சநேரத்திலே வந்துவிடுவார்.

நாகவல்லி: இப்போ ஒன்னும் ரயில் இல்லையே?

சரோஜா: அவர் காரிலேயே வருவார்.

நாகவல்லி: காரிலேயா? இத்தனை தூரத்திற்குக் காரிலேயே வருவாரா?

சரோஜா: இதென்ன தூரம் அவருக்கு? மேலும் அவருக்கு வேலை செய்யும் நேரம் தவிர மற்ற நேரத்திலெல்லாம் எங்காவது சுற்றிக்கொண்டே இல்லாவிட்டால் பிடிக்காது.

நாகவல்லி: அக்கா, நானும் நம்ம ஊரிலே பார்த்திருக்கிறேன். சதா டாக்டர் ஏதாவது பண்ணிக்கொண்டே இருக்கிறார். சும்மா கொஞ்ச நேரங்கூட இருக்கமாட்டார் போலிருக்கிறது.

சரோஜா: சதா வேலை செய்வதிலேதான் அவருக்கு இப்போ நிம்மதி. சும்மா இருக்க அவராலே முடியாது.

நாகவல்லி: ஆமாம் அக்கா. அவரும் கல்யாணம் பண்ணிக் குடும்பமும் குழந்தையுமா இருந்தால் அப்போ அவர் மனசுக்கு நல்லா இருக்கும்.

[கேசவனுடைய கார் ஹார்ன் சப்தம் கேட்கிறது.]

சரோஜா: அதோ, டாக்டர் வந்துவிட்டார்—ராஜு இன்னுமா தூங்கிக்கொண்டிருக்கிறார்?

நாகவல்லி: ஆமாம்; இன்னைக்கி என்னமோ மணி ஆகியும் இன்னும் தூங்குகிறார்.

சரோஜா : நாகவல்லி, கதவைத் திறந்துவிடு டாக்டர் வருகிறார்.

[இரண்டுபேரும் எழுந்திருக்கிறார்கள்]

நாகவல்லி (கதவைத் திறந்துகொண்டே) : வாங்கோ டாக்டர்.

[கேசவன் உள்ளே நுழைகிறான்.]

கேசவன் : ராஜூ எப்படி இருக்கிறார்? உடம்புக்கு தேவலையா?

நாகவல்லி : இப்போ ரொம்பத் தேவலேங்க அதோ, அவரும் எழுந்துவிட்டார்.

[ராஜூ உள் அறையிலிருந்து வருகிறான்.]

கேசவன் : ராஜூ. உடம்பு எப்படி இருக்கிறது இப்போ?

ராஜூ : நாளுக்கு நாள் மனசு தெளிவாகத்தான் ஆகுதுங்க. ஆனால், மனசு நல்லா இருந்தால் அதுவும் கஷ்டமாகத்தான் இருக்குதுங்க. ஏதோ கவலை.

கேசவன் : அதெல்லாம் ஒன்றும் கவலைப்படவேண்டியதில்லை. உங்கள் குழந்தை சௌக்கியமாக இருக்கிறான். சரோஜா பக்கத்தில் இல்லாததுதான் அவனுக்கு ஏக்கமாகஇருக்கிறது. நாகவல்லியைக்கூட மறந்துவிட்டான். ஆனால், சரோஜாவை அவனால் மறக்க முடியவில்லை சரோஜாவையே கூப்பிட்டுக்கொண்டிருக்கிறான்.

ராஜூ : அவனுக்கு இனிமேல் சரோஜா அம்மாதான் தாயாக இருக்கவேணும்.

கேசவன்: கண் வைத்தியர் ஒருவர் மிகவும் கெட்டிக்காரரர் இருக்கிறார். அவரை நம் ஊருக்கு வரும்படி ஏற்பாடு செய்திருந்தேன். நேற்று அவர் வந்து பார்த்துவிட்டுக் குழந்தைக்குக் கண்ணிலே ஆப்பரேஷன் பண்ணினால் கண் பார்வை வந்துவிடும் என்று சொல்லி

யிருக்கிறார். கண்ணிலே அப்படி அதிகமாகக் கெடுதல் ஏற்படவில்லையாம்.

நாகவல்லி (மகிழ்ச்சியோடு): அப்படிங்களா? அந்தக் கண் டாக்டர் எங்கிருக்கிறார்.

கேசவன்: அவரும் இந்தப் பட்டணத்துக்காரர் தான்; எழும்பூரிலிருக்கிறார். சரோஜா இன்றைக்குப் புறப்பட்டு ஊருக்கு வந்தால் குழந்தையை எடுத்துக் கொண்டு இரண்டு நாளில் இங்கே வந்துவிடலாம். நீங்களெல்லாம் இருக்கிறபோதே குழந்தைக்கும் கண் ஆப்பரேஷன் பண்ண ஏற்பாடு செய்யலாமென்று நினைக்கிறேன். அதனாலே ராஜு இனிமேல் கவலைப்பட வேண்டியதே இல்லை. கவலையில்லாமல் இருந்தால் அவருக்கு உடம்பு பூரணமாகக் குணமாகிவிடும்.

ராஜு: எனக்கு அதெல்லாம் இப்போக் கவலையில்லை டாக்டர்.

கேசவன்: பிறகு, வேறென்ன கவலை? எதுவாக இருந்தாலும் அதைப் போக்க நானிருக்கிறேன். தைரியமாய் இருங்கள்.

சரோஜா: நான் ஒரு விஷயம் சொல்லட்டுமா? ராஜுவுக்கு இந்த வருஷம் வியாபாரத்திலே பெரிய நஷ்டமாம், சொத்தெல்லாம் போய்விட்டதாம்.

கேசவன்: அப்படியா ராஜு? அதற்காகவும் நீங்கள் கவலைப்பட வேண்டாம். மறுபடியும் வியாபாரம் பண்ணுவதற்கு நான் முதல் தருகிறேன். அதை வைத்துக் கொண்டு வியாபாரம் ஆரம்பிக்கலாம்.

ராஜு: டாக்டர், அதனாலெல்லாம் என் மனசு ஆறியா போகும்? எனக்குக் கவலையே இல்லாமல் இருக்கவேணுமானால் நீங்கள் ஒரு காரியம் பண்ணினால் போதும்......

கேசவன்: அதென்ன காரியம்?

ராஜு: நான் மனசுவிட்டுப் பேசலாமா டாக்டர்?

கேசவன்: சும்மா தாராளமாகச் சொல்லுங்கள்.

ராஜு: நீங்கள் சரோஜா அம்மாவைக் கலியாணம் பண்ணிக்கவேணும். அப்பொழுது எனக்கு ஓரளவு கவலை தீரும்.

கேசவன்: ராஜு, எங்கள் கலியாணப் பேச்சில்தான் உங்களுடைய கவலையே முதலில் ஆரம்பித்தது. இப்பவும் அதனால் உங்கள் கவலை தீரப்போகிறதில்லை.

ராஜு: நீங்கள் அப்படிச் சொல்லக்கூடாது. அதிலேதான் என்னுடைய வாழ்க்கையே இருக்கிறது. நான் ஏதோ உபசாரத்திற்குச் சொல்லுவதாக நீங்கள் நினைக்கப்படாது.

கேசவன்: நானும் சரோஜாவும் இப்பொழுது உங்களுக்கு உதவியாக இருப்பதை எண்ணி நீங்கள் இப்படி ஆசைப்படுகிறீர்கள். இதனால் எனக்குச் சந்தோஷம் அதிகப்படுமென்று நீங்கள் நினைத்தால் அது சரியல்ல. பொதுமக்களுடைய சேவைதான் இன்றைக்கு எனக்குச் சந்தோஷம்.

ராஜு: அதற்கு சரோஜா உதவியாகத்தானே இருக்கிறார்கள்? அவர்கள் அதற்கு இடைஞ்சலாக இல்லையே?

கேசவன்: இப்பொழுது இருக்கிறது போலவே சரோஜா உதவியாக இருப்பதிலே எனக்கு ஆட்சேபமில்லை.

ராஜு: கலியாணம் செய்துகொண்டால் இந்த சேவை இன்னும் சந்தோஷமாக நடக்கும்.

கேசவன்: ராஜு, கலியாணம் என்று மட்டும் என்னிடம் பேசாதீர்கள். இந்த விஷயத்திலே என்னுடைய தீர்மானத்தை மாற்றமுடியாது.

ராஜு: ஏதோ என் மூத்த மனைவி விஷயத்திலே கடமை தவறிப் போனதைக் குறித்துத்தானே நீங்கள் இப்படி விரதம் எடுத்திருக்கிறீர்கள்?

கேசவன்: அதுதான் உங்களுக்கு முன்னமேயே தெரியுமே?

ராஜு: டாக்டர், நீங்கள் அந்த விஷயத்திலே கடமை தவறவில்லை என்று நான் நிரூபித்தால்?

கேசவன்: அப்போ நிலைமை வேறாகத்தான் இருக்கும். ஆனால், இப்படியெல்லாம் பேசிக் கொண்டிருப்பதிலே என்ன பிரயோசனம்? உங்கள் மூத்த மனைவி இனிமேல் உயிர்பெற்று வரப்போகிறார்களா என்ன?

ராஜு: டாக்டர், நீங்கள் என்னுடைய வேண்டுகோளுக்காவது இணங்கப்படாதா? நான் உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன்.

கேசவன்: ராஜு, உடம்புக்கு சரியில்லாத உங்களோடு நான் கண்டிப்பாகப் பேசவிரும்பவில்லை. இந்த ஒரு விஷயத்தைப் பற்றி மட்டும் என்னிடம் பேச வேண்டாம். இது என்னுடைய சொந்த விஷயம்.

ராஜு (விசனத்தோடு): அப்போ நான் பயித்தியமாகவே இருந்துவிடுகிறேன். எனக்கு இந்த வைத்தியமும் வேண்டாம்: ஒன்னும் வேண்டாம்.

கேசவன்: இதென்ன? நீங்கள் குழந்தைமாதிரி பேசுகிறீர்கள்? நான் உங்களைப் பார்க்க வந்ததே தப்பாகப் போய்விட்டது. இப்படியெல்லாம் பேசி மனசை அலட்டிக் கொள்ளாதீர்கள்.

ராஜு: உங்களுக்கு என் மனசைப் பற்றி என்ன தெரியும்? உங்களுக்கு வெறுத்ததெல்லாம் பால். கடமை, கடமை! அதைத் தவிர வேறென்ன தெரியும்?

கேசவன் (சிரிக்க முயன்று): எனக்கு மட்டுமா பால் வெறுப்பு? உங்களுக்கும் பால் வெறுப்பாகத்தான் இருக்கும்—ராஜு நான் இப்பொழுதே திருச்சிக்குப் புறப்படுகிறேன். சரோஜாவை இன்று இராத்திரி ரயிலில் அனுப்பிவையுங்கள்—நாளை நின்று அடுத்த நாளே அவள் உங்கள் குழந்தையோடு இங்கே திரும்பி வந்து விடுவாள். குழந்தைக்குச் சிகிச்சை செய்ய இன்றைக்கே ஏற்பாடு செய்துவிட்டுப் போகிறேன்.

ராஜு: சரோஜா அம்மாவைக் காரிலேயே உங்கள் கூடவே அழைத்துக்கொண்டு போகப்படாதா?

கேசவன்: இல்லை—சரோஜா ரயிலில் வரட்டும். நான் புறப்படட்டுமா? (நாகவல்லியின் பக்கம் திரும்பி) நாகவல்லி, எல்லாம் நன்றாகப் பார்த்துக்கொள்ளம்மா. ராஜுவுக்குச் சீக்கிரத்திலே பூரணமாக சௌக்கியமாகி விடும், உன் குழந்தைக்கும் பார்வை வந்துவிடும், கவலைப்படாதே. திருச்சிக்கு நீங்களெல்லாம் திரும்பி வந்தபிறகு ராஜு வியாபாரம் செய்வதற்கு நான் உதவி செய்கிறேன். எல்லாம் சந்தோஷமாக முடியும். நான் போய்வரட்டுமா?

[நாகவல்லியையும் ராஜுவையும் பார்த்துப் பேசி விட்டுப் போகிறான். சரோஜாவின் பக்கம் திரும்பவில்லை.]

ராஜு: எனக்குச் சந்தோஷம் தேடப்பார்க்கிறார் இந்த டாக்டர். அவருக்கு மட்டும் சந்தோஷம் வேண்டியதில்லை.

[மெதுவாகச் சிரிக்கிறான். பிறகு சரோஜாவைப் பார்த்துப் பேசுகிறான்.]

ஏம்மா, ரயிலில் தனியாகப் போகிறதுக்குப் பதிலாக டாக்டர் காரிலேயே போயிருக்கலாமே?

சரோஜா (சிரித்த முகத்துடன்): ரயிலில் தனியாகப் போக எனக்கென்ன பயமா?

ராஜு : வீண் செலவுதானே? காரில் போயிருந்தால் செலவே இருக்காது.

சரோஜா : பணம் செலவாகிறதைப்பற்றி டாக்டருக்குக் கவலையே கிடையாது. நான் போய் என் துணி எல்லாம் எடுத்து வைக்கிறேன்.

[விசனத்தை வெளிக்குக் காட்டாமல் உள்ளே போகிருள்.]

நாகவல்லி (சரோஜா மறைந்ததும் ராஜுவைப் பார்த்து) : காரிலே அக்காளோடு தனியாக டாக்டர் போகமாட்டார். அக்கா தனியாக டாக்டர் இருக்கிற இடத்திற்கே வரப்படாதென்று சொல்லியிருக்கிறுர்.

ராஜு : அதைத் தெரிந்துகொள்ளத்தான் இத்தனை நேரம் டாக்டரையும் சரோஜாவையும் கேள்வி கேட்டேன். சரோஜா அதை எங்கிட்ட மறைக்கப் பார்க்கிருள். இருந்தாலும் எனக்குத் தெரியாமலா போகும்? நாகவல்லி, டாக்டர் சரோஜாவிடத்திலே முகங்கொடுத்துக்கூடப் பேசவில்லை, கவனித்தாயா?

நாகவல்லி ; பேசவில்லையா? நான் அதைக்கவனிக்கவில்லை.

ராஜு : உனக்கு என்னதான் தெரிகிறது? எல்லாரையும் எதார்த்தமாக நம்பிவிடுவாய். என்னைப் பற்றிக்கூட உனக்கு ஒன்றும் தெரியாது.

நாகவல்லி : டாக்டர் அவசரமாகப் போய்விட்டார். இல்லாவிட்டால் பேசியிருப்பார்.

ராஜு : இல்லை, நாகவல்லி. சரோஜாவிடத்திலே டாக்டருக்கு ரொம்பக் கோபம். அதனால்தான் பேசவில்லை. அது சரோஜாவுக்கும் தெரியும்.

நாகவல்லி : டாக்டருக்கு இப்போ என்ன கோபம்? அக்காதான் இங்கே நம்மோடு இருக்கிருர்களே?

ராஜு : உனக்குத் தெரிந்தது அவ்வளவுதான். சரோஜாவைக் கலியாணம் பண்ணிக்கும்படி டாக்டரிடம் ரொம்ப வற்புறுத்தி நான் பேசினேனே இல்லையோ அதற்குக் காரணம் சரோஜா என்றுதான் டாக்டர் நினைக்கிறார். சரோஜா சொல்லிக் கொடுத்துத்தான் நான் அவரை இன்றைக்குக் கேட்டதாக அவருக்குப் பட்டிருக்கிறது. அதற்காகத்தான் கோபம்.

நாகவல்லி : அக்காள் உங்களிடத்திலே ஒரு நாளாவது கலியாணத்தைப் பற்றிப் பேசினதே இல்லையே?

ராஜு : அது அவருக்கு எப்படித் தெரியப் போகிறது?...ம்...

[பெருமூச்சு விடுகிறான்.]

மறுபடியும் எனக்குப் பைத்தியமே வந்துவிட்டால நல்லது.

நாகவல்லி : எதுக்கு இப்படிப் பேசறீங்க?

ராஜு : நாகவல்லி உனக்கு ஒன்றுமே தெரியாது. அந்த டாக்டருக்கும் ஒன்றுந் தெரியாது.

நாகவல்லி : எனக்கொன்னும் தெரியாது. மெய்தான். ஆனால் அந்த டாக்டருக்கா ஒன்னுந் தெரியாது?

ராஜு (சற்று வெறுப்போடு) : நாகவல்லி, சரோஜாவை இங்கே கொஞ்சம் கூப்பிடு. உன்னோடு பேசிப் பிரயோசனமில்லை.

[நாகவல்லி உள்ளே போகிறாள். ராஜு ஆழ்ந்த யோசனையிலிருக்கிறான். சிறிது நேரத்தில் சரோஜா வருகிறாள்.]

சரோஜா : கூப்பிட்டீர்களா?

ராஜா : நீங்கள் ரயிலுக்குப் புறப்படுகிறபோது டாக்டருக்கு ஒரு கடிதம் கொடுக்கிறேன். அதை நீங்கள் அவரிடத்திலே கொடுத்துவிடுவீர்களா?

சரோஜா : கடிதமா? சற்று நேரத்திற்கு முன்பு தானே டாக்டரிடம் பேசிக்கொண்டிருந்தீர்கள்?

ராஜு : எல்லாம் பேசவில்லை. ஒரு முக்கியமான விஷயம் விட்டுப்போயிற்று. அதைத்தான் கடிதத்திலே எழுதப்போகிறேன்.

சரோஜா : டாக்டரிடத்திலே கடிதத்தைக்கொடுக்க எனக்கு என்ன ஆட்சேபமிருக்க முடியும்? ஆனால்... நீங்கள் என்னைப்பற்றி எதுவும் எழுதக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். டாக்டரிடம் நேரில் நீங்கள் பேசியதைப்பற்றியே என்மீது அவர் கோபத்தோடு போயிருக்கிறார்.

ராஜு : உங்களைப்பற்றி ஒன்னும் எழுதப்போவதில்லை. எல்லாம் என்னைப்பற்றித்தான். அந்தக் கடிதத்தை நீங்களே டாக்டரிடம் நேரில் கொடுக்க வேணும்.

சரோஜா : நானே நேரில் போகமுடியாது. ஆனால் அந்தக் கடிதம் டாக்டரிடம் நிச்சயமாகச் சேரும்படி நான் பார்த்துக்கொள்கிறேன்.

ராஜு (சற்று யோசித்து) : சரி. அப்படிச் செய்தால் போதும். கடிதம் டாக்டர் கையில் கிடைக்காமல் போகக்கூடாது. அதற்கு நீங்கள் உறுதி கொடுக்க வேணும்.

சரோஜா : அதற்கு நான் பொறுப்பு. சரிதானே.

ராஜு : சரியம்மா — இப்பொழுதே கடிதத்தை எழுதி வைக்கிறேன். நீங்கள் ரயிலுக்குப் புறப்பட எல்லாம் தயார் செய்யுங்கள்.

[ராஜு உள்ளே எழுந்து போகிறான். சரோஜா யோசனையோடு நிற்கிறாள்.]

திரை

## காட்சி ஆறு

[கேசவன் தன் மாளிகையில் படுக்கை அறையில் நின்றுகொண்டிருக்கிறன். அவன் கையில் ஒரு கடிதம் இருக்கிறது. அதை அவன் ஊன்றி ஊன்றிப் பார்த்துக்கொண்டிருக்கிறன். காலை சுமார் ஏழு மணி இருக்கும்.]

கேசவன் (பதட்டமாக நடந்துகொண்டு): ராமா, டேய் ராமா—எங்கே போருய்?

ராமன் (உள்ளே நுழைந்துகொண்டே): ஸார், இதோ வந்துவிட்டேனுங்க.

கேசவன்: இந்தக் கடிதத்தை யார் கொண்டு வந்தார்கள்?

ராமன்: சரோஜா அம்மாதானுங்க. பட்டணத்திலே இருந்து காலையில் வந்தாங்க. ரயிலிலிருந்து பால பிருந்தாவனத்துக்குப் போகிற வழியிலே இதைக் கொடுத்திட்டுப் போனுங்க.

கேசவன்: வேறே ஒன்னும் சொல்லவில்லையா?

ராமன்: ஒன்னும் சொல்லலீங்க. உங்களிடம் கடிதத்தைக் கொடுக்கும்படி ஒரு வார்த்தைதான் சொன்னுங்க.

கேசவன்: வேறு ஒன்றுமே சொல்லவில்லையா? என்னைப் பார்க்க வேணுமென்று கேட்கவில்லையா?

ராமன்: இல்லவே இல்லீங்க. அந்த அம்மா அப்படிக் கேட்கிறதையே விட்டுட்டாங்க. சும்மா பொய் சொல்ல முடியுங்களா?

கேசவன் (பதட்டத்தோடு): டேய், சரிதான்டா சும்மா உளருதே.

ராமன்: நிஜந்தானுங்க. சரோஜா அம்மா வந்ததும் கடிதத்தை என்னிடத்திலே கொடுத்துவிட்டு உடனே போய்ட்டாங்க. நிற்கக்கூட இல்லீங்க.

கேசவன் : நின்ருல்தான் என்னடா தப்பு? நீ போய் சரோஜாவை உடனே இங்கே அழைத்து வா. அவசரமாகப் பார்க்க வேணுமென்று சொல். சைக்கிளை எடுத்துக் கொண்டு ஓடு......

[ராமன் புறப்படத் திரும்புகிருன்.]

டேய் ராமா, நீ போனுல் நேரமாகும். நானே காரில் புறப்பட்டுப் பாலபிருந்தாவனத்திற்குப் போகிறேன். நீ இங்கே இரு.

[அவசரமாகப் புறப்படுகிருன். கடிதத்தை ஒரு முறை பார்த்துக்கொண்டு போகிருன். ராமன் சந்தேகத்தோடு பார்த்துக் கொண்டு நிற்கிருன். அவன் முகத்தில் கவலை தோன்றுகிறது.]

திரை

காட்சி ஏழு

[பாலபிருந்தாவனத்தில் சரோஜாவின் அறை. அவளைப் பார்த்தால் சற்று நேரத்திற்கு முன்பு தான் ரயிலிருந்து வந்தது போலத் தெரிகிறது. குளிக்கப் புறப்படும் நிலையிலிருக்கிருள். கேசவன் வேகமாக உள்ளே நுழைகிருன்.]

சரோஜா (ஆச்சரியத்தோடு) : யார், டாக்டரா?

கேசவன் (பதட்டத்தோடு) : சரோஜா, நான் கடமை தவறவில்லை. கடமை தவறவே இல்லை.

சரோஜா (சந்தேகத்தோடு) : நீங்கள் கடமை தவறிவிட்டதாக யாரும் சொல்லவில்லையே?

கேசவன் : யார் சொன்ஞலும் இனிமேல் நீ நம்ப வேண்டாம்......அவன் தான் குற்றம் செய்தவன். குற்றம் செய்தவனுக்குத் தண்டனை கிடைத்து விட்டது.

சரோஜா (கேசவனை உற்றுப் பார்த்துக்கொண்டே): டாக்டர் ,யார் குற்றம் செய்தது?

கேசவன் : நான்தான் உனக்குப் பெரிய தவறு செய்துவிட்டேன். சரோஜா, நீ நினைத்தது உண்மை எனக்குத்தான் தெரியவில்லை.

சரோஜா (திகைத்துப் போய்) : டாக்டர், நீங்கள் சொல்வது எனக்கு......புரியவில்லையே?

கேசவன்: நீ சொன்னது இத்தனை நாளும் எனக்குப் புரியவில்லை......நீ சொன்னதுதான் சரி. நீ அந்தக் கடிதத்தைப் பார்த்தாயா?

சரோஜா : ராஜு எழுதிய கடிதத்தையா? அதை உங்களுக்குத்தான் எழுதி இருக்கிறார்.

கேசவன் : அதில் எல்லாம் விளக்கமாக இருக்கிறது அதை ராஜு எப்பொழுது எழுதினார்?

சரோஜா : நான் சென்னையிலிருந்து ரயிலுக்குப் புறப்படும்போது எழுதி என்னிடம் கொடுத்தார்.

கேசவன் : ராஜுவுக்குப் பயித்தியம் பிடித்ததற்குக் காரணம் இப்பொழுது விளங்கிவிட்டது. நீ நினைத்தது சரி, சரோஜா.

சரோஜா : கடிதத்திலே என்ன எழுதியிருக்கிறார்?

கேசவன் : என்ன எழுதுவார்? நடந்த விஷயத்தை அப்படியே எழுதியிருக்கிறார்—இதோ படித்துப் பார்.

சரோஜா (இன்னும் சந்தேகத்தோடு): நீங்களே வேண்டுமானால் படியுங்கள் டாக்டர்.

கேசவன் : ஓகோ! என்னுடைய கடிதத்தை நீ படிக்கமாட்டாயா? சரி—நானே படிக்கிறேன்.

[கடிதத்தை அவசரமாகப் பிரித்து வேகமாகப் படிக்கிறான்.]

"அன்புள்ள டாக்டருக்கு, உலகத்தை ஏமாற்றினாலும் கடவுளை ஏமாற்ற முடியாது என்று எனக்கு

நிச்சயமாக விளங்கிவிட்டது. கடவுள் எனக்குச் சரியான தண்டனை கொடுத்துவிட்டார். நாகவல்லியின்மேல் எனக்கிருந்த ஆசையால் நானே என் முதல் மனைவியைக் கொன்றுவிட்டேன். அவள் இறந்துபோனால் பிறகு நான் சந்தோஷமாக நாகவல்லியை மணந்துகொண்டு வாழ முடியும் என்று நம்பினேன். ஆனால் ஒவ்வொரு காரியமும் என் நம்பிக்கை தவறு என்று காட்டிவிட்டது. உங்களை சாட்சியாக வைத்து உலகத்தை ஏமாற்ற எண்ணினேன். கடைசியிலே நீங்களே எனக்குத் தண்டனை கொடுக்கும் கருவியாக ஏற்பட்டுவிட்டீர்கள். உங்களுக்குத் தெரியாமலேயே கடவுள் உங்களை அப்படி உபயோகப்படுத்திவிட்டார். நீங்கள் கடமையொன்றும் தவறவில்லை. என் வீட்டிற்கு வந்து என் முதல் மனைவியைப் பார்க்க வரும்படி உங்களை நான் கேட்டேனே அதெலாம் உலகத்தை ஏமாற்றத்தான். நான் உங்களிடம் வருவதற்கு முன்னாலேயே அவள் உயிர் நீங்கிவிட்டது. ஏதோ திடீரென்று நோய் வந்ததாகவும் டாக்டரிடம் காட்டி வைத்தியம் செய்ய முயன்றதாகவும் நான் எல்லோரையும் நம்பும்படி செய்யத்தான் உங்களைக் கூப்பிட வந்தேன். அது உங்கள் வாழ்க்கையை இப்படிப் பாதிக்கும் என்று எனக்கு அப்பொழுது தெரியாது. அதுவே என் மனத்தையும் சுட்டெரித்துப் பைத்தியமாக்கிவிட்டது. இந்தக் குற்றத்தைச் சுமந்துகொண்டு என்னால் சந்தோஷமாக வாழ முடியாது. இப்பொழுது எனக்கு உயிரே ஒரு பாரமாகிவிட்டது. இனி நான் வாழ விரும்பவில்லை. என் முதல் மனைவிக்கு நான் கொடுத்த விஷத்திலே இன்னும் பாக்கி என்னிடம் பத்திரமாக இருக்கிறது. அதுதான் எனக்கு இப்போது அமிர்தம். நீங்கள் இந்தக் கடிதத்தைப் பார்ப்பதற்கு முன்னால் நான் இந்த உயிர்ப் பாரத்தை நீக்கிக்கொள்ளுவேன். நாகவல்லி

ஒன்றுமறியாதவள். அவளையும் அவள் குழந்தையையும் உங்கள் பாதுகாப்பில் விடுகிறேன். டாக்டர், என்னை மன்னித்துவிடுங்கள். சரோஜா அம்மா அத்தனையும் தங்கம். அவர்களைக் கைவிட்டு விடாதீர்கள். டாக்டர்... நான்..."

சரோஜா (இடைமறித்து) : அட பாவமே, அந்த நாகவல்லி இப்போ எப்படியெல்லாம் தவித்துக்கொண்டிருக்கிறாளோ? பக்கத்திலே யாருமே உதவிக்கில்லை.

கேசவன் : சரோஜா, உடனே நாம் பட்டணத்துக்குப் போகவேணும். காரிலேயே போகலாம்.

சரோஜா : நானும் கூட வரலாமா டாக்டர்?

கேசவன் : ஆமாம். நீ என் கூடத்தான் வரவேணும். உன்னை இத்தனை நாளாகக் கடுமையாக நடத்தினதற்கு மன்னிப்புக் கேட்கவேண்டாமா? காரிலே போகப் போக நான் உன்னிடத்திலே மன்னிப்புக் கேட்க நிறைய நேரமும் தனிமையும் கிடைக்குமல்லவா?

சரோஜா (மகிழ்ச்சியோடு) : டாக்டர்......

கேசவன் : டாக்டரா? இனிமேல் நான் உன்னுடைய கேசவனல்லவா?

[இருவரும் ஒருவரை ஒருவர் அன்பு வழியப் பார்த்துக் கொண்டு நிற்கின்றனர்.]

சரோஜா : கேசவ், உடனே புறப்படலாமா?

கேசவன் : ஆமாம். இப்பொழுதே புறப்படுவோம். இல்லாவிட்டால் நமது கடமையைச் சரிவரச் செய்தவர்களாகமாட்டோம்.

திரை